உ

ஸ்ரீராமஜெயம்,

# இரங்கேசவெண்பா.

என்கின்ற

## நீதிசூடாமணி

மூலமும் - உரையும்.

பிறைசை

சாந்தக்கவிராயர்

செய்தது.

இதை.

உதாரணங்களுடன் சுத்தபாடமாக

வழங்குவிக்கும்பொருட்டு

கோகுலாபுரம்

அருணாசலமுதலியாரால்

பரிசோதித்து

திருப்பதி

இரத்தின முதலியார்

அவர்களது

*Kalay gyana press.*

DOOR N 6 MUDUKISTNENSTREET

MADRAS

1883

ஸ்ரீராமஜெயம்.

# இரங்கேசவெண்பா.

என்கின்ற

# நீதிசூடாமணி.

மூலமும் - உரையும்.



## பாயிரம்.

சீர்கொண்டகாவிரிசூழ் தென்னரங்கத்தெம்பிரான்
பார்கொண்டதாளைப்பரவியே—வேர்கொண்டே
யோங்குபுகழ்வள்ளுவனா ரோதுகுறண்மூதுரையாப்
பாங்குபெறச்சொல்வேன் பரிந்து.

சொற்றவதிகாரந் தோறுமொருகுறளில்
உற்றபொருளுக்குதாரணமா—முற்றுகதை
யானீலவண்ணன ரடிபரவலாலிந்நூல்
மானீதி சூடாமணி.

பிறைசைவரு சாந்தப் பெயரவன் சொல் வெண்பா
குறையுளது நீக்கிக் குறையா—நிறைமொழியாச்
சொற்றமிழோர் கொள்வர் சுடரோனால் வெண்பிறைதான்
உற்றமதியா வதனையோர்ந்து.

## கடவுள்வாழ்த்து.

சொன்ன கம்பத் தேமடங்கல் தோன்றுதலா லன்பருளத்
தின்னமுதமாகு மிரங்கேசா—மன்னும்
அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(என்பது) அகரமுதலுயிர்பன்னிரண்டும் வடிவுவேறுபட்டிருந்தும், அகரம் நாதமாத்திரையாய் எழுத்துக்களோடெல்லாங் கலந்துவருமென்றதுபோலச சர்வேஸ்வரன் சர்வாந்திரியாமியாய்ச் சர்வலோகங்களிலுங் கலந்து எங்குநிறைந்திருப்பானென்று நாயனார்திருக்குறளிற்றிருவுளம்பற்றினார் அதற்குதாரணமாக இரணியனும் பிரகலாதனை ஸ்ரீமந்நாராயணன் எங்குமிருப்பானென்ன இரணியன்இத்தூணி லிருப்பானோவென்று அத்தூணைத் தன்கையாலறைய அப்பெருமான் பொற்றம்பத்தினின்று நரசிங்

கவழிவமாகிவந்தனர்.—(ஆதலால் ஸ்ரீசர்வேஸ்வரன் உலகமெல்லாவற்றிலு ங் கலந்துநிறைந்திருப்பானென்று கண்டுகொள்க.) (க)

## வான்சிறப்பு.

கொண்டலுறையூர்கச்சிக் கோநகரிற் செய்குணத்தால்
எண்டிசையும்போற்று மிரங்கேசா—மண்டிக்
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(என்பது) உலகங்களிலே வாழுகிறஉயிர்கள் பலவற்றையும்கெடுக்கப்பட்டதும் அவ்வாறு கெட்டவுயிர்களை இரட்சிக்கப்பட்டதும் மழையாமென்று நாயனார் திருக்குறளில் திருவுளம்பற்றினார் அதற்கு தாரணமாக உறையூரிலேசோழராசன் காரணமாகச் செவ்வந்தியீஸ்வரனருளினால் ஒருசாமம்மண்மாரிபெய்து ஊரையும் அவ்வூரி லுள்ளாரையுங் கெடுத்தது காஞ்சீபுரத்தில்ஒருகுழந்தைகாரணமாக ஏகாம்பரநாதரருளினால்பொன்மாரிபெய்து யாவரையுமிரட்சித்தது—(ஆதலால் கெடுக்கப்படுவதுங்கெட்டபேர்களைக்காப்பாற்றப்படுவதும்மழையென்றுகண்டுகொள்க.

## நீத்தார்பெருமை

மன்னன்மகமுங்காதி மைந்தன்றனையடைந்தோன்
இன்னுயிருங்காத்தா னிரங்கேசா—சொன்னால்
உரனென்னுந்தோட்டியா னோரைந்துங்காப்பான்
வரனென்னும்வைப்புக் கோர்வித்து.

(என்பது) அறிவாகிய அங்குசத்தினாலே சத்தபரிசரூபரசகந்தமென்னும் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம்பண்ணித் தவமேற்கொண்ட பெரியோர்கள் வரமென்றவைகளுக்கெல்லாம் ஒருவிதையென்றுநாயனார்திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக அம்பரீஷனமகாராசன் புருஷமேதயாகத்துக்குத்தக்க ஒருபிள்ளையை முனிவரனிடத்துவிலைகொடுத்து வாங்கிக்கொண்டுபோகையில் அந்தப்பிள்ளை தன்னம்மானாகிய விஸ்வாமித்திரமகாமுனிவனை வழியிற்கண்டுவணங்கி நடந்தசெய்தியைச்சொல்ல அவனும்மைத்துனனையழைத்து அவன்காதில் ஒருமந்திரத்தை யுபதேசித்துஉன்னை யூபஸ்தம்பத்திலணைத்துக் கட்டினவுடனே இந்தமந்திரத்தையுச்சரித்தால் யாகமுநிறைவேறும் உன்பிராணனுந் தப்புமென்றுசொல்லி அரசனுடனேயனுப்பிவித்தார். அரசனும், இந்தப்பிள்ளையை இட்டுக்கொண்டுபோய்யாகசாலையிலே நிறுத்தி யாகத்தைத் தொடங்கிநடத்திஅவிர்ப்பாகத்துக்குமாம்சம்வேண்டிபிள்ளையையூபஸ்தம்பத்திற

சரணம்
கட்டினன் அப்பொழுது அந்தப்பிள்ளைவிசுவாமித்திருபதேசித்தட
த்தையுச்சரித்தமாத்திரத்தில், பிரமதேவன்வந்து அரசனுக்குப்புருஷ
தயாகபலனுந்தந்துபிள்ளைபிராணனையுங்காத்துஇரட்சித்தார்.—(ஆதலாகே
பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம்பண்ணின துறவிகள்வரங்கள்கொடுத்ததற்கு (௫)
ஒருவிதையென்றுகண்டுகொள்க)

## அறன்வலியுறுத்தல்.

கானக்குரங்கெழலாற் கங்கைசுதன்முதலோர்
ஈனப்படலா லிரங்கேசா—ஆன
அறத்தினூஉங் காக்கமுமில்லையதனை
மறத்தலினூஉங்கில்லை கேடு

(என்பது)தருமத்தின்மேற்பட்டசெல்வமுமில்லை, அத்தருமத்தை மறந்துவிடுதலின்மேற்பட்டகேடுமில்லையென்றுநாயனார்திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினர்,அதற்குதாரணமாக இரகுநாயகர்பிதாவாக்கியம் தப்பாமல் தருமத்துடனே நடந்தபடியால்,அசேதனராகியு நிராயுதராகியுமிருக்கிறகுரங்குகளால்,இராவணன்முதலிய அரக்கர்களைச் செயித்தார் துரியோதனன் பதின்மூன்று வருஷத்துக்குமேல்பாண்டவர்கள் பாகமாகியஇராச்சியத்தை விடுகிறேனென்றுசொல்லிப் பின்புவிடாமல்அதர்மஞ்செய்தபடியினலே.வீஷ்டுமாச்சாரியர்முதலிய பலவான்களையும் நூறுபேர்தம்பிமார்களையுமிழந்து,தானுமடிந்துஅஸ்தனபுரத்தையுங்கைவிட்டான்.—(ஆதலால்தருமத்தின்மேற்பட்டஆக்கமில்லையென்றுகண்டுகொள்க.) (௬)

## இல்வாழ்க்கை.

பத்துடனுன்கில்லாம் பரகதிகொண்டோகினன்
இத்தலமேலாழ்வானிரங்கேசா—நித்தம்
இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந் தலை.

(என்பது)பிதுர்கர்மம்,தேவாராதனை, அதிதிபூசை, நண்பினர்க்குபகாரம்,தன்குடும்பசம்ரட்சணை,இந்தஐந்துவகைகளையுங்காத்து இயல்புடனே இல்லறதருமத்தினின்றும வழுவாமல் வாழுகின்றவன் பஞ்சாக்கினிமத்தியில் ஊசிமுனையிலேநின்று தவம்பண்ணுகிற பெரியோர்களிலுந் தலைமையானவ ராவரென்று நாயனார்திருக்குறளில்திருவுளம்பற்றினர் அதற்குதாரணமாக கஞ்சநூராழ்வார் இல்லறதருமமும்வழுவாமல்நடந்தபடியினலே, தனக்குஇருபக்கத்திலுமுள்ள பதினன்குவீட்டுடனேபரமபதம்போகப்பெற்றாராதலால்.தவம்பண்ணித் தனக்குத்துணையா யுள்ளாரை

மோட்சத்துக்கழைத்துப்போனபே ரிவ்வுலகத்தில்லை.—(ஆதலாலில்லறம்வழுவாது நடந்தகிரகஸ்தர் தவசுபண்ணினபேர்களிலுந் தலைமையாவரென்றுகண்டுகொள்க.)

(ரு)

## வாழ்க்கைத்துணை நலம்.

மாண்டவியாசர் சாபத்தைவல்லிருளான்மாற்றினள்
ஈண்டோர்மடந்தையிரங்கேசா—நீண்டபுகழ்
பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னுந்
திண்மையுண்டாகப்பெறின்.

(என்பது.)பெண்ணாகியஜனனத்துக்கு இளமைப்பருவத்தில்மாதாபிதாசொற்படிநடக்கவேண்டும்,எவ்வன்னகாலத்தில் தன்கணவன்சொற்படி நடக்கவேண்டும், முதுமைப்பருவத்தில்பிள்ளைகள சொற்படிநடக்கவேண்டும், இவ்வாறுமூன்றுகாலத்திலுந் தன்மனதின்படிநடக்கச்சுதந்தரமில்லாததினால் அந்தப்பெண்ணினிடத்தில் கணவனேதெய்வமென்றுகருதி அவனுக்குச்செய்யத்தக்க வுபசாரங்களில்வழுவாதுநடந்துக்கொள்ளுங் கற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறுவாளெனில் அவளுக்குமேற்பான ஜனனமிவ்வுலகத்தில் வேறில்லையென்று நாயனார்திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குஉதாரணமாக நளாயினியென்னும் பெயரையுடைய ஒருகன்னிகையானவள் ஒருமுனிவரைமணம்புரிந்து அந்தமுனிவரைத் தெய்வமாகக்கருதி அவருக்குச் செயயத்தகும்பணிவிடைகளில் வழுவின்றிச்செய்துவருநாளில் அம்முனிவரன் மனைவியின்மனத்தைசசோதிக்க வேண்டி சந்தேகத்தில் குஷ்டவியாதியையுண்டுபண்ணிக்கொண்டு,உடல்முழுதுஞ்சீழும் உதிரமும்பெருகிக் கைகால்களில்விரல்கள் அழுகிசைந்துவிழவும்,பார்ப்பவர்மூக்கின்முனையையும் கண்களையுமூடிக்கொண்டுநெடுந்தூரமோடிப்போகவும துர்க்கந்திக்கச்செய்துவந்தார் அப்படியிருக்குநாளிலும் நளாயினியென்னுங் கற்பினள் மனம்வெறுப்பின்றி ஒருநாளைக்கிரண்டுதரம் ஸ்நானஞ்செய்வித்து அவ்விரணங்களையெல்லாம்மிருதுவானவஸ்திரத்தாலொற்றி நல்ல பரிமளதிரவியங்களைமேலேபூசிஅந்தி நாற்றத்தைமாற்றி வேறேயுயர்ந்தவஸ்திரங்களையுடுத்தி அவர்விரும்பிய பதார்த்தங்களைப் புசிப்பித்துஉபசாரஞ்செய்துவருநாளில்பின்னும்அக்கற்பிள்ளைச்சோதிக்கவிரும்பிப் பெண்ணே இந்தவாரணியத்தையடுத்தவூரில் மதனபிஷேகமென்னும் பெயரையுடைய ஒருதாசியிருக்கின்றாள அவள்மீது எனக்கு ஆசையுளதானென்றுசொன்னார் அப்படியே தங்களகருத்தின்படி நடப்பதற்கு,யாதொருதடையுமில்லை அவ்வாறே செய்விக்கிறேனென்றுசொல்லி நித்தியமவளுக்கமைய்யெழுந்து சாணம் நீர்தெளித்து முமகோலமா எடுத்துந்

கொண்டுபோய் அத்தாசிவீட்டுக்கதவுதிறப்பதற்குமுன் தெருவிற்சாணம் போட்டுப் பெருக்கிச்சுத்திசெய்து அழகானகோலங்களிட்டு ஒருவர்கண்ணி லும் அகப்படாமல் வந்துவிடுவாள் இவ்வாறேநாள்தோறும்நடந்துவருகை யில் அந்தத்தேவடியாள் இதைக்கண்டு ஆச்சரியப்பட்டு இப்படிசெய்கிறவ ளைக்கண்டுபிடிக்கும்படித் தன்பணிவிடைக்காரர்களுக்குந்தாவுசெய்துங் காணக்கூடாமையால் தானேயொருநாளிராத்திரிமுழுதும் விழித்திருந்து அந்தப்பதிவிரதைவந்து சாணந்தெளிக்குந்தருணத்தில் எதிராக வந்து அ ம்மாமன்காசி தங்களைப்பார்த்தால் மகாலட்சுமிபோலிருக்கின்றதே இந்த இழிவானதொழிலை என்வீட்டில் செய்ததற்குக்காரணமென்னையோ வென் றுபணிந்துகேட்க நளாயினி யெனுங்கற்பினள் அந்தத்தேவடியாளைநோக் கிஎன்கணவன் மிகுந்தவியாதிஸ்தர் அவர்உன்மேலாசைப்பட்டார் அவர் கருத்துநிறைவேற இப்பணிசெய்கின்றேன் என்றுசொல்லஅவ்வார்த்தை க்கிரங்கி அம்மணி உன்கருத்துப்படிசெய்ய எதிர்பார்த்திருக்கின்றேன்இ ன்றிரவில்வரும்படிசெய்யென்றுசொல்ல அவ்வுத்தரவுபெற்றுக்கொண்டு மீண்டுதன்னிடம்வந்து அவள்சம்மதியைக்கணவனுக்குச்சொல்லி அன்று பொழுதுபோனவுடனே அவருக்கு ஸ்நானஞ்செய்வித்தாபரணங்களைஎல்லா நல்லவஸ்திரங்களாலொற்றிபரிமளதிரவியங்களால்தேகத்தைதிருமணஞ் செய்வித்துஉயர்ந்தவஸ்திரங்களாலலங்கரித்துஅவர்மனதுபோலபோசன ஞ்செய்வித்துஒருபெருங்கூடையிலுட்காரவைத்துதன்றலையிற்றாங்கிக் கொண்டுபோய் அந்தத்தாசியின்வளவில் இறக்கி அவளிடத்திலொப்புவி த்துதான் தெருவில்வந்திருக்க அந்தத்தேவடியாள் அவனைத்தனதுசப்பிர கூடமஞ்சத்திலிட்டுக்கொண்டுபோய் அவர்களிகூரச்சேர்ந்தணைந்து விடி யற்காலையில் அனுப்பஅந்தம்மாள் அவனைமுன்போலக்கூடையில் வைத் தெடுத்துவரும் வழியில்மாண்டவியனென்னுமோர்மகாரிஷிபூர்வவினையால்க ழுவிலேற்றப்பட்டு உபத்திரவத்தோடிருக்கிறவர்தங்காலில்கூடைபட்டுமி குந்தவாதையுண்டானதாலவர்கோபித்து பெண்ணேநீபொழுதுவிடிந்தா ல்மாங்கல்ய மறுப்பாயென்று சபித்தார் அதைக்கேட்ட நளாயினி தான் பொழுதுவிடியாமலிருக்கக்கடவதென்று சபித்துவீட்டுக்குப் போயினள் அவ்வாறே பொழுதுவிடியாமலிருந்தால நித்தியகர்மம் அனுஷ்டானங்கள் செய்வதற்குச்சூரியன் தோன்றாமையால் சகலதேவர்களுங்கூடி சூரியபக வானிடத்திற்சென்று ஏனையாஉதையத்துக்கு வாராமல்நிறுத்தக்கார ணமேதென அவர்பதிவிரதையான நளாயினிசாபமிருப்பதால் அதைமீறி வரப்படாதென்றுசொல்ல அத்தேவர்கள் யாவரும் நளாயினிடத்து வந்து

அம்மணிபொழுதுவிடியாமலிருப்பதால் சகலரும்நித்தியகர்மாநுஷ்டானங்கள் செய்வதற்குஇடையூராயிருப்பதால்பொழுதுவிடியும்படி தயை செய்யவேண்டுமெனபொழுதுவிடிந்தால் என்மாங்கல்யம் இழக்கவேண்டிவரும் அதுமாண்டவியர்சாபமென அவர்கள்யாவரும் மாண்டவியரையேற்றியிருக்குங்கழுவிடத்துப்போய் அவரைக்கழுவினின்று இறக்கி அவரால் அந்தச்சாபத்தை நிவர்த்திசெய்து பதிவிரதையால் இந்தச்சாபத்தை நிவர்த்திசெய்து பின்பு பொழுதுவிடிந்தது.— (ஆதலால்கற்புடையபெண்ஜெனனத்தைவிட பெரியதகுதியுள்ளஜெனனம்வேறொன்றில்லை யெனக்கண்டுகொள்க.)

(ரு)

## புதல்வரைப்பெறுதல்.

வேதம்புகழ்நதியை மேதினியிற்றந்துகுலந்
தேதங்கொடுத்தானிரங்கேசா—ஓதில்
எழுபிறப்புந்தீயவை தீண்டாப்பழிபிறங்காப்
பண்புடைமக்கட்பெறின்

(என்பது)பழியும்பாவங்களுமாகிய குற்றத்துக்கஞ்சிய நற்குணங்களுடைய ஒருசற்புத்திரனை ஒருஜெனனத்திலேபெற்ற மாதாபிதாவை எழுஜெனனத்திலுந் தீயவையாகிய பாவங்களணுகாதென்றுநாயனார்திருக்குறளில் திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக சகரர்கள்அசுவமேதயாகத்தைக்குறித்துவிட்டு குதிரையை இந்திரன்பிடித்துப்போய் நாகலோகத்திலே கபிலமகாமுனிவர் தவம்பண்ணுகிறதபசுசூழலின்பின்கட்டிவைத்துப்போயினான் அப்போது சகரர்கள்குதிரையைக்காணாமல் அறுபதினாயிரம்பேருந்தேடிப் பதினாலுலகமும்பார்த்துவரும்போது பாதாளலோகத்திற் கபிலமாமுனிவனுக்குப் பின்னாற்கட்டிநின்ற குதிரையைக்கண்டுகோபித்துக் கபிலமாமுனிவனை யுதாசினமாய்ப்பேசினபோது முனிவனுக்குக்கோப மதிகரித்து கண்ணை விழித்துப் பார்த்தார்பார்த்தவுடனே அறுபதினாயிரம்பேரும்வெந்து சாம்பலாக்கிப் பசாசத்துவமடைந்தார்கள் பின்பு அந்தவம்சத்திலே பாகீரதனென்றொருபிள்ளைபிறந்து ஆசாரியனைத் தனது வம்சபாரம்பரியத்தை விசாரிக்கும்போது சகரர்கள் அறுபதினாயிரம்பேர் கபிலரிஷி சாபத்தால்வெந்துசாம்பலாகிப் பசாசத்துவமடைந்தார்களென்று சொல்லக்கேட்டு அவர்கள்எப்படிமோட்சமடைவார்களென்றுகேட்க,ஆகாயகங்கைஅவர்கள் வெந்தசாம்பலை நனைக்குமானால்பசாசத்துவ நீங்கிமோட்சமடைவார்களென்றுசொல்ல பாகீரதன் பிர்மாவைநோக்கிப் பதினாயிரம்வருஷம் அரியதவஞ்செய்ய, அப்பொழுது பிரமன் எதிராகவந்து நீ செய்த தவத்தால்மகிழ்ந் தனம்,ஆனால்நினதுகுலத்திற்பிறந்த மூதா

தைகள்அறுபதினாயிரம்பேர் அருந்தவன்கோபாக்கினியால் முன்பிறந்தார்கள் அவர்களின்பொருட்டு ஆகாயகங்கைபூமியில்வரக்கருதினாய் அந்நதி பூமியில்வருமேல் அவளதுவேகத்தைத்தரிப்பவர்கள் பரமசிவனையன்றி யாவராலுங்கூடாததலால்அவனைநோக்கித் தவஞ்செய்யென் றுரைத்துப் போயினான்.பின்புசிவனைநோக்கிப் பதினாயிரம் வருஷந்தவஞ்செய்ய,கண்ணுதல் அங்குவந்துநின்கருத்தினையாமுடிக்குதுமென்றுகூறி மறைந்தார்பின்புகங்கையைநோக்கி ஐயாயிரம்வருஷம் தவஞ்செய்யக்கங்கைவந்து உன் கருத்தென்னையென நீபூமியில்வரவேண்டுமென,நான்பூமியின்கண்வரின் உலகமழிந்துபோமென பரமசிவன்தடுப்பரென அதுசெய்தி விநோதமாகவிருக்கின்ற தின்னுமறியென்று சொல்லி மறைந்தனள்·பின்பு சங்கரனை நோக்கி இரண்டாயிரவருஷந்தவஞ்செய்யகங்காதரன்போந்துநின்னை வென்னென,வணங்கிகங்கைபூதரைந்தனளென,நீயஞ்சவேண்டாஞ்சிறிதும்பிதிர்ந்திடாவகையடக்குவனென்றுகூறி மறைந்தனன்பின்பு கங்கையை நோக்கி இரண்டாயிரம்வருஷந்தவஞ்செய்ய அப்பொழுதுகங்கையானவள் சத்தியலோகமும் தேவருலகமுமடுங்கசத்தித்துவந்துதோன்றினாள்அக்காலத்தில் பார்வதிகொழுநனாகியஇறைவன்ஒருதுளியுஞ்சிந்திடாது ஒப்புற்றசடையில் கரந்தனன்,அதுதெரியாது பாகீரதன்திகைத்து நிற்கையில்பசுபதி-வரநதி-நஞ்சடையிலிருக்கின்றனள், நீ பயப்படாதேயென்று தன்சடையினின்றும்சிறிதுவிடகங்கைபூமியிலிறங்கினாள் உடனேபாகீரதன்விரைவாகமுன்னேசெல்ல பாகீரதி விரைவாகவரும்போதுசாக்கினிமத்தியில்தவஞ்செய்யும் சன்னுமகாரிஷியாகத்தையழிக்க அம்முனிவனதைகோபத்தோடுஉள்ளங்கையாலெடுத்துஉண்டுமகிழ்ந்தனன். கங்கையைக்காணாது வருந்திபாகீரதன் சன்னுமுனிவரனைவணங்கி நடந்தசெய்தியைச் சொல்ல நீகொண்டுபோவென்றுதன்காதின்வழியாகவிட,பின்புஅவ்வரநதி சகரர்கள் வெந்தசாம்பலின்மீதுசெல்ல,நரகத்திலிருக்குஞ்சகரர்கள் மோட்சத்தையடைந்தார்கள் —(ஆதலால் ஒருகுலத்தில்பிறந்த சற்புத்திரனாலே இருபத்தொருதலைமுறையிலுண்டானதோஷங்களெல்லாநீங்கிச்சுகமடைவார்களெனக்கண்டுகொள்க.) (௭)

## அன்புடைமை.

வெற்பின்சிறகரியவென்னொன்பளித்துமுனி
இப்புவியைக்காத்தானிரங்கேசா—நற்புகழாம்
அன்பிலாரெல்லாந்தமக்குரியரன்புடையார்
என்புமுரியர்பிறர்க்கு

# இரங்கேசவெண்பா.

(என்பது.) அன்பில்லாதவர்கள்எல்லாப் பொருள்களாலுந்தமக்கே யுரியவராவர் அன்புடையார்தம்மென்பினாலும் பிறருக்குரியராவரென்று நாயனார்திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாகபூர்வத்தில்மலைகளெல்லாஞ் சிறகொடுகூடியிருந்து ஆகாயத்திற்பறந்துசென்று பட்டணங்களின்மீது,போய்தங்கி அப்பட்டணத்தையழிப்பதுமன்றிஅதிலுள்ள ஜீவகோடிகளையுநாசம்பண்ணித் துன்பஞ்செய்தால் அம்மலைகளின் சிறகுகளையறுக்க இந்திரன்தன்கையின்கண்ணுள்ளவச்சிராயுதத்திற்கு வலியில்லாமையால், ததீசிமகாமுனிவனிடத்திற் சென்று என்கையிலுளளவச்சிராயுதம்பழமையாதலால்,கொடுமைசெய்யு மலைகளின் சிறகினைவெட்டவலியில்லாமையால்,தயைசெய்து தங்கள்முதுகெலும்பை அதற்காகத் தரவேண்டுமென்றுவேண்ட,அம்முனிவன் மகிழ்ந்து சமாதியிலிருந்து தனதுசீவாத்மாவை கபாலத்தின்வழியாகவிடுத்துமுதுகுத்தண்டெலும்பை இந்திரனுக்குலோகோபகாரமாகக் கொடுத்தார்.—(ஆதலால் அன்புடையரென்பும் பிறர்க்குரியதெனக்கண்டுகொள்க.)

(அ)

## விருந்தோம்பல்.

தேசுறுபெருமாறன்றெளித்தமுளையமுதிட்
டீசனுடன்போந்தானிரங்கேசா—பேசுங்கால்
செல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பான்
நல்விருந்துவானத்தவர்க்கு

(என்பது)வந்தவிருந்தினர்களுக்கெல்லாம் அமுதுபடைத்துபசரித்தனுப்பி,இன்னம்வரும் விருந்தினருண்டோவென்று வழிபார்த்திருக்கும்இல்லறத்தான்,சொர்க்க லோகத்திலுள்ளதேவர்களுக்கு நல்லவிருந்தினனாவன் என்றுநாயனார்திருக்குறளில் திருவாய்மலர்ந்தருளினார்அதற்குதாரணமாக இல்வாழ்க்கையில்வழுவாதுநடக்கும் இளையான்குடி மாறனென்னும் நாயனார்எந்தக்காலத்திலும்சிவனடியார் யார்வந்தாலும் அவர்களையுபசரித்து அமுதுசெய்வித்துஅனுப்பி,இனிவருவாரில்லையோவென்று எதிர்பார்த்திருப்பார், இப்படிநடந்துவருநாளில் பரமசிவன்இவர் தரித்திரம்வந்தகாலத்திலும் இச்செய்கைவிடாரென்பதை உலகத்தாருக்குத்தெரிவிக்கவெண்ணி,இளையான்குடிமாறநாயனாருக்குத் தரித்திரம்வரும்படி செய்தார் அக்காலத்திலும் தனதுநிலம்மாடுமுதலிய பொருள்களைவிற்று முன்போலவேசெய்துவருநாளில்,பரமசிவன் ஒருநாள்அர்த்தராத்திரிவேளையில் மழையில்நனைந்துகொண்டு சங்கமவுருவாகிவந்துகதவைதட்டினார்,அந்தச்சமயத்தில் அன்றுமுழுதும் அமுதுபடிமுதல்ஒன்றுமில்லாமையால் பட்டி

னியாகவிருந்துபடுத்துக்கொண்டிருந்த நாயனாரெழுந்துவந்து கதவைத்திற ந்தார், சங்கமர் அப்பா மிகுந்தபசியாகவிருக்கின்றது அமுதுகொடுக்கவேண் டுமென்றார். அப்பொழுது சங்கமருக்குக் கைகால்சுத்திசெய்ய சலங்கொடுத் து ஆசனத்தில்உளுக்காரவைத்துப்பின்பு தன்பத்தினியாரிடத்துப் போய் அடியார்வந்திருக்குஞ்சங்கதிகளைச்சொல்லி ஆலோசித்துதாமதஞ்செய்யா மல்ஒருகூடையையெடுத்து தலைமீதுகவிழ்த்துக்கொண்டுகாலால் வழிதட விக் குழியுடன்சென்றுவயலில் மழையால்மிதக்கும் முளைத்தவிரைகளைக் கையால்வாரி கூடையைநிரப்பிஎடுத்துக்கொண்டுவீட்டில்வந்து எதிர்பார் த்திருந்த தன்மனைவியாரிடத்திற்கொடுத்து அதைவறுத்து குற்றியரிசியா க்கி அமுதுசெய்து பலகறியமுதோடு அன்னங்கொடுக்கஐயரிடத்தில்வந் தழைக்கும்போது, பரமசிவன்சந்தோஷித்து இடபவாகன ரூடராயெழுந்த ருளிக் காட்சிகொடுத்துஇளையான்குடிமாறநாயனாரையும் அவர்மனைவியா ரையும் கைலாயத்துக்கழைத்துப்போயினார்.—(ஆதலால்பசித்துவந்தவரு க்குஅன்னம்கொடுத்த இல்லறவாழ்க்கையையுடையான் தேவர்களிலு மே லாவனெனக்கண்டுகொள்க.) (௯)

இனியவைகூறல்.

வஞ்சமர்நட்பால்வென்றுமாநிலமாளத்தருமன்
இன்சொல்லாற்பெற்றானிரங்கேசா—மென்சொல்
நயனீன்றுநன்றியயக்கும்பயனீன்று
பண்பிற்றலைப்பிரியாச்சொல்

(என்பது)ஒருவருக்குப்பலனுண்டாகவேண்டி யாவர்க்கும் பிரியம் வரும்படிநல்லவசனஞ்சொல்லவல்லவருக்கு, நயகுணங்களுந்தந்து சகலசெ ளங்களாலும் உபகாரத்தையுந்தருவிக்குமென்று நாயனார்திருக்குறளிலே திருவுளம்பற்றினார். அதற்குதாரணமாக, தருமபுத்திரமகாராசன் இந்திரப் பிரஸ்தத்தில் இராச்சியம்பண்ணுகிறகாலத்திலும் ஆரண்ணியவாசஞ்செ ய்கிறகாலத்திலும் ஐம்பத்தாறுதேசத்தரசர்களோடுஅவர்களுக்கினிமையு ண்டாகும்படி மிருதுவானநல்லவசனங்களாலும் வசனித்துக்கொண்டிருந் தபடியால், துரியோதனனோடுபோர்செய்யத் தொடங்கும்போது அநேகவ ரசர்கள் தங்கள்தங்கள் சேனைகளோடுவந்துபடைத்துணையாகவிருந்து சத் துருக்களைச்செயம்பண்ணி துரியோதனன்முதலிய நூறுபேரையுங்கொன் று அஸ்தினாபுரத்தைப் பட்டங்கட்டிக்கொண்டு அரசாண்டிருந்தார்.—(ஆ தலால்யாவருக்கு நல்வசனமாகப்பேசவேண்டுமெனக்கண்டுகொள்க) (௰)

## செய்ந்நன்றியறிதல்.

நாடிச்சிறைக்கருடனைக்கொடுங்கணையை
ஈடழித்தானன்றோவிரங்கேசா — நாடுங்கால்
செய்யாமற்செய்தவுதவிக்குவையகமும்
வானகமுமாற்றலரிது.

(என்பது)முன்னேருபகாரமும் ஒருவன்செய்யாமலிருக்க, அவனுக்குசமயத்திற்செய்த வுதவிக்கு கைமாறாக சுவர்க்க மத்திய பாதாலமாகியதிரிலோகங்களையுங்கொடுத்தாலும்போதாதென்று நாயனார் திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக, சீதாதேவியை இராவணன்எடுத்துக்கொண்டுபோனதால், ஸ்ரீராமலட்சுமணன் இலங்கைக்குப் போய் இராவணாதிகளோடு யுத்தஞ்செய்யுங்காலத்தில், இந்திரஜித்து இலட்சுமணப்பெருமான்மீது நாகபாசமவிட்டபோது இட்சுமணன்முதலியசேனைகளெல்லாம் இறந்துபோனபோது, தேவர்களெல்லாம் இனியெப்படியென்றுவருந்தப்படுங்காலத்தில்ஸ்ரீராமர் கருடனை நினைக்க, அக்கருடன் நமக்கென்னவென்றிராமல் பூமியிலிறங்கி அந்தயுத்தகளமெங்கும்வட்டமிட்டுப்பறந்துதிரிய-அவனது சிறகடிக்காற்றினாலே நாகபாசத்தினதுகட்டுகளெல்லாஞ்சின்னபின்னப்பட்டுநீங்க, இலட்சுமணன்முதலியசேனைகளெல்லா நித்திரைதெளிந்தெழுந்ததுபோலவெழுந்து, இராவணன்முதலிய அரக்கர்களையெல்லாங்கொன்று அவர்களால் உலகத்துக்குண்டாகிய வுபத்திரவங்களை நீக்கினார் —(ஆகலால்செய்யாமற்செய்தவுதவிக்கு எவற்றைக்கொடுத்தாலும்ஒப்பல்லவெனக்கண்டுகொள்க)
(௰௧)

## நடுவுநிலைமை.

வேதவிதிவீமாவிலங்கிற்குடற்பாதி
ஈதல்வழக்கென்றானிரங்கேசா — ஓதுங்கால்
நன்றேதரினுநடுவிகந்தாமாக்கத்தை
யன்றேயொழியவிடல்

(என்பது)வழக்குவந்தவிடத்தில் நன்மையான இலாபம் வருகிறதாகவிருப்பினும்-நடுவுநிலைமைநீங்கியதாலுண்டாகும் இலாபத்தை அப்பொழுதே நீங்கி விடக்கடவாயென்று நாயனார் திருக்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக தருமபுத்திரர் இராசசூய யாகம்பண்ணவேண்டி வீமசேனனை புருஷாமிருகத்தையழைத்துவர அனுப்பியபோது, வீமசேனன்போய் அதையழைக்க, அப்பொழுது புருஷாமிருகமானது நீ நாற்காதவழிமுன்னேபோனால் பின்னாலே யுன்னைத்தொ

டர்ந்துவருவேன் அப்பொழுது நீயென்னெல்லையி லகப்படுவாயாகில்உன்
னைநான்பட்சிப்பேன் என்னெல்லையைவிட் டுன்னெல்லையிற்போய் விடுவா
யானால் உன்பின்னாலேவருவேனென்றுசொல்ல வீமசேனனு மதற்கிசைந்
து அவ்வாறேவேகமாகவரும்போது புருஷாமிருகமும் வீமனைத்தொடர்ந்
துநெருங்கஅப்பொழுதுவீமன் ஒருமணியாம்பருக்கைக்கல்லைப்போட்டவு
டனே அந்தக்கல்விழுந்தவிடத்தில் ஒருசிவாலயமுந்தீர்த்தமுமுண்டாகஅ
தைக்கண்டு புருஷாமிருகம் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்துசிவதரிச
னஞ்செய்துகொண்டு ஆலயத்தைப்பிரதட்சணஞ் செய்துகொண்டு வருவ
தற்குள்ளாக வீமன்வெகுதூரம்வேகமாகநடந்தும் புருஷாமிருகம்பின்றொ
டர்ந்துநெருங்க நெருங்குமிடங்களிலெல்லாம் ஒவ்வொன்றாகஎழுபருக்கா
ங்கால்போட்டுவேகமாகநடந்துபோக அங்கங்கும்உண்டான தீர்த்தங்களில்
ஸ்நானஞ்செய்துசிவதரிசனஞ்செய்து ஆலயத்தைப்பிரதட்சணஞ் செய்து
கொண்டு வீமனைத்தொடர்ந்துவருங்கால் வீமன்தன்னெல்லையி லொருகா
லும் மிருகத்தினெல்லையிலொருகாலுமாகவைத்து நடக்கும்போதுபுருஷா
மிருகமானதுவந்துபிடித்துக்கொண்டது அப்போதுவீமசேனன் எல்லைத்
ப்பிப்பிடித்தாயென்றுசொல்ல மிருகமானதென்னெல்லையிற்பிடித்தேனெ
ன்றுசொல்ல இப்படிஇருவரும்வழக்காகி தருமபுத்திர ரிடத்திற்போய் இ
ருவருந்தங்கள்வழக்குகளைச்சொல்லிக்கொள்ள அப்பொழுதுதருமபுத்திர
ர்இருவர்வாய்மொழியையுங்கேட்டுத் தம்பியென்றுபாராமல் வீமசேனன்
சரீரத்திற்பாதிமிருகத்துக்குக் கொடுக்கும்படித் தீர்மானஞ்செய்தார் அவ்
வாறு நடுவுநிலைமையாகத் தீர்மானஞ்சொன்னபடியால் தருமராசன்சரீரத்
தோடு சுவர்க்கத்துக்குப்போனார்—(ஆதலால் நடுவுநிலைமை நீங்குதலாலு
ண்டாகும் ஆக்கத்தைஅன்றேயொழியற்பாலதெனக் கண்டுகொள்க.)(௧௨)

## அடக்கமுடைமை.

ஆன்றசபையிடைங்காச்சிசுபாலன்
என்றிரங்கானென்றோவிரங்கேசா—சான்றோர்கள்
காக்கபொருளாவடக்கத்தையாக்கம்
அதனினூஉங்கில்லையவர்க்கு.

(என்பது) யாவனொருவன் அடங்கிநடப்பதைத் தனம்போலக்கா
த்து அடங்கிநடந்தானாகில் உயிர்க்குஅதற்குமேலாகியலாபமில்லையென்று
நாயனார் திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக தரு
மபுத்திரர் இராஜசூயயாகத்தை நிறைவேற்றிஅங்குள்ள முனிவர்களைப்பா
ர்த்து அக்கிரபூசையாருக்குச்செய்யவேண்டியதென்றுகேட்க வேதவியாச

டர்ந்துவருவேன் அப்பொழுது நீயென்னெல்லையி லகப்படுவாயாகில்உன்னைநான்பட்சிப்பேன் என்னெல்லையைவிட் டுன்னெல்லையிற்போய் விடுவாயானால் உன்பின்னாலேவருவேனென் றுசொல்ல வீமசேனனு மதற்கிசைந்து அவ்வாறேவேகமாகவரும்போது புருஷாமிருகமும் வீமனைத்தொடர்ந்துநெருங்க அப்பொழுதுவீமன் ஒருமணியாம்பருக்கைக்கல்லைப்போட்டவுடனே அந்தக்கல்விழுந்தவிடத்தில் ஒருசிவாலயமுந்தீர்த்தமுமுண்டாகஅதைக்கண்டு புருஷாமிருகம் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்துசிவதரிசனஞ்செய்துகொண்டு ஆலயத்தைப்பிரதட்சணஞ் செய்துகொண்டு வருவதற்குள்ளாக வீமன்வெகுதூரம்வேகமாகநடந்தும் புருஷாமிருகம்பின்றொடர்ந்துநெருங்க நெருங்குமிடங்களிலெல்லாம் ஒவ்வொன்றாகஏழுபருக்காங்கால்போட்டுவேகமாகநடந்துபோக அங்கங்கும்உண்டான தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்துசிவதரிசனஞ்செய்து ஆலயத்தைப்பிரதட்சணஞ் செய்துகொண்டு வீமனைத்தொடர்ந்துவருங்கால் வீமன்தன்னெல்லையி லொருகாலும் மிருகத்தினெல்லையிலொருகாலுமாகவைத்து நடக்கும்போதுபுருஷாமிருகமானதவனைப்பிடித்துக்கொண்டது அப்போதுவீமசேனன் எல்லைத்தப்பிப்பிடித்தாயென்றுசொல்ல மிருகமானதென்னெல்லையிற்பிடித்தேனென்றுசொல்ல இப்படிஇருவரும்வழக்காகி தருமபுத்திர ரிடத்திற்போய் இருவரும்தங்கள்வழக்குகளைச்சொல்லிக்கொள்ள அப்பொழுதுதருமபுத்திரர்இருவர்வாய்மொழியையுங்கேட்டுத் தம்பியென்றுபாராமல் வீமசேனன்சரீரத்திற்பாதிமிருகத்துக்குக் கொடுக்கும்படித் தீர்மானஞ்செய்தார் அவ்வாறு நடுவுநிலைமையாகத் தீர்மானஞ்சொன்னபடியால் தருமராசன்சரீரத்தோடு சுவர்க்கத்துக்குப்போனார்—(ஆதலால் நடுவுநிலைமை நீங்குதலானுண்டாகும் ஆக்கத்தை அன்றேயொழியற்பாலதெனக் கண்டுகொள்க.)(கஉ)

## அடக்கமுடைமை.

ஆன்றசபையிடைங்காச்சிசுபாலன்
என்றிரந்தானென்றோவிரங்கேசா—சான்றோர்கள்
காக்கபொருளாவடக்கத்தையாக்கம்
அதனினூஉங்கில்லையவர்க்கு.

(என்பது) யாவனொருவன் அடங்கிநடப்பதைத் தனம்போலக்காத்து அடங்கிநடந்தானாகில் உயிர்க்கு அதற்குமேலாகியலாபமில்லையென்று நாயனார் திருக்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக தருமபுத்திரர் இராஜசூயயாகத்தை நிறைவேற்றிஅங்குள்ள முனிவர்களைப்பார்த்து அக்கிரபூசையாருக்குச்செய்யவேண்டியதென்றுகேட்க வேதவியாச

ர்கிருஷ்ணசுவாமிக்குச் செய்யவேண்டிய தென்றுசொல்ல அப்படியவருக் கேபூசைபண்ணினார் அப்பொழுது அச்சபையிலுள்ள வரசர்களும் ரிஷிக ளெல்லாம்பார்த்திருக்கச் சிசுபாலனெழுந்திருந்து அக்கிறபூசை அந்த இ டையனுக்குச்செய்வானேன்என்று கிருஷ்ணசுவாமியைநிந்தித்துத் தன்பி ராணனை இழந்தான்—(ஆகலால் அடங்கிநடப்பதைவிட மேலான தொன் றுமில்லையென்று கண்டுகொள்க.) (கரு)

## ஒழுக்கமுடைமை.

வேடவான்மீகர்பின்பு வேதியரின்மேலானார்
ஏடவிழ்தார்சூடுமிரங்கேசா—நாடில்
ஒழுக்கமுடைமைகுடிமையிழுக்கம்
இழிந்தபிறப்பாய்விடும்.

(என்பது) பிரம்ம க்ஷத்திரியவைசியசூத்திரரென்னப்பட்ட நான்கு வருணத்தாரும் தங்கள்மரபுவழுவாமல் நடந்தாராகில் அவர்குலத்தில்மே லாவர் தங்கள்மரபுநழுவிநடப்பாராகில் அவர்மேலானவருணத்தாராயினு ம்இழிந்தவருணத்தாரவரென்று உயர்ந்தோரால்சொல்லப் படுவரென்றுநா யனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாகவான்மீகர்பிரம் மகுலத்திலேபிறந்தும் தன்மரபினதுஒழுக்கம்வழுவி காட்டுவழிகளினின் று வழியிற்போகின்றவர்களை அடித்துப்பறித்துத் திரிந்தமையால் யாவரா லும் வேடனென்றுசொல்லப்பட்டார் பின்புவழியில்சத்தரிஷிகளும் வந்த போது அவர்களையடித்துப்பறிக்கும்போது அப்பெரியோர்கள்இவன்பிரா மணனாகவிருந்தும்ஒழுக்கம்வழுவிச்செய்யும் இத்தீயசெய்கையால் இழிந் தவேடனானனென்று மனதிரங்கிஅவரையழைத்து இராமமந்திரத்தையுப தேசித்து ஞானம்வரும்படிசெய்து தவசுபண்ணும்படி செய்வித்ததால் இரா மாயணகாவியம்பாடி பிரம்மரிஷியாயினார்—(ஆதலால் யாவனொருவன்குல தருமம் வழுவாதுநடக்கிறானோ அவனேகுலசிரேஷ்டனாவன் எனக்கண் டுகொள்க) (கசு)

## பிறனில்விழையாமை.

* அந்தகன்றேவிதனையகன்றக்கினியனைந்தே
இந்திவிழிவுற்றானிரங்கேசா—முந்தப்
பிறன்மனைநோக்காதபேராண்மைசான்றோர்க்
கறனொன்றோவான்றவொழுக்கு.

---

* இந்தக்குறளுக்கு முற்பாதி இப்படி என்றும்பாடம்
அம்பிகையைநோக்கியவ்ஏசன் கண்ணிழந்தான்
இம்பர்பரவுமிரங்கேசா—வம்பாய்

(என்பது) சான்றோர்க்கு பிரதாரத்தையிச்சியாத பெரிய ஆண்தன்மையானது அவருக்குஅதுவேதருமமாயிருப்பதுமன்றி மிகுந்த நல்லொழுக்கமுமாகுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந் தருளினார் அதற்குதாரணமாக முற்காலத்தில்அக்கினிதேவன் இயமன் மனைவியையிச்சித்து புணர்ந்தமையால் சகலதேவர்களுங்காண அவமானப்பட்டான்.ஆதலால் பிறன்மனைவியையிச்சியாததே மேலான அறமெனக்கண்டுகொள்க-

## பொறையுடைமை.

முந்துமரந்தரித்தமூர்க்கன்சொற்கேட்டுமவன்
எந்தைபிரானென்றானிரங்கேசா—கொந்தி
அகழ்வாரைத்தாங்கு நிலம்போலத்தம்மை
இகழ்வார்ப்பொறுத்தறலை

(என்பது) பூமியானது கிணறுவெட்டுகிறவர்கள்எவ்வளவுதாழ்வாகவெட்டினாலும் அவர்கள்நிற்பதற்கு ஆதாரவாகவிருந்துஅவரைத்தாங்கிஅமுதம்போலசலத்தையுந்தருதலால் பெரியோர்கள்தங்களையாதாமொருவர் தூஷித்தாலும் அவர்கள்மேல்கோபியாது பொறுத்தலேமேன்மையென்று நாயனார்திருவுளம்பற்றினார் அதற்குதாரணமாக சோழராசாவினிட சமுகத்தில் ஒருவன்சென்றுசேரமாண்டாருக்குக் கோபம்வருவிக்கிறேனென்று பிரதிக்கினைசெய்துகொண்டுபோய் சேரமாண்டாருடைய வாசலிலே நெடுநாளாகநிற்கிறஒருமாமரத்தைவெட்டினான் அப்பொழுது சேரமாண்டாருடைய தாயார்வெளியில்வந்து மரம்வெட்டுகிறவன்ஆரென்றுகேட்டாள்அப்போதுமரம்வெட்டினவன் உனக்குமூழாளனென்றுசொன்னான் அந்தவார்த்தையைச்சேரமாண்டார்கேட்டு அவன்சொன்னசொல்லினாலேமாத்துக்குடையவன் அவனேயென்றார்அந்தச்சொல்லை மரம்வெட்டினவன் கேட்டு உடனேசேரமாண்டாரிடத்தில்வந்து சாஷ்டாங்கமாகநமஸ்காரம் பண்ணி அடியேன்கொஞ்சபுத்தியினாலே அபசாரம்பண்ணினேனென்றுஉபசாரஞ்சொல்லிப்போனான் அப்பொழுதுசோழராசாவின் சமுகத்திலேயிருந்தது ராமக்கள்சேரமாண்டாரதுபொறுமைக்குஅதிசயித்துச்சிரக்கம்பனம்பண்ணினார்கள்—(ஆதலால் ஒருவனாதுகன்னகடூரமான வசனங்களைப்பொறுத்தவர் பஞ்சவிந்திரியங்களையடக்கிய முனிவர்களிலுமேலானவராவரெனக் கண்டுகொள்க.) (கசு)

## அழுக்காறாமை.

வெள்ளிகொடுத்தல்விலக்கிவிழிதோற்றலகில்
எள்ளலுற்றானன்றோவிரங்கேசா—உள்ளத்

# இரங்கேச வெண்பா.

அழுக்கா றுடையார்க்கது சாலுமொன்னார்
வழுக்கியுங்கேடீன்பது,

(என்பது) ஒருவனுக்கு பொறாமையானது பகைவரில்லாம லிருப்பினும்கேட்டைத்தருவது உண்மையாதலால் அப்பொறாமை யுடையவர்க்குகேடுண்டாவதற்கு பகைவர்வேண்டுவதில்லையென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக மாவெலிச்சக்கிரவர்த்திதிரிலோகத்தையுந் தன்னுக்குள்ளாக்கிக்கொண்டு அரசாட்சி செலுத்திவருநாளில்யாகஞ்செய்துபூமியைப்பிராமணனுக்குத் தானமாகக்கொடுக்கயத்தனித்தபோது திருமாலானவர் அதுமுறையன்றென்று வாமனவுருவங் கொண்டுமாவெலியிடத்துவந்து தன்காலடியால்மூன்றடிமண்கேட்க அதற்கிசைந்துதாரைவார்த்துக்கொடுக்குஞ்சமயத்தில் அவன் ஆசாரியனாகிய சுக்கிராசாரிதன்சீடனாகிய மாவெலிக்குஇதனாற் கேடுவருமென்றெண்ணி தாரைவார்க்குஞ்சலம் வெளியில்வாராதபடிகெண்டிகையின்மூக்கு வண்டுருவமாகவந்தடைத்துக்கொள்ள அப்பொழுதுதாரையேற்ற பிராமணனாகியவாமனன் தருப்பையினாலே கெண்டிகையின்மூக்கைக்குத்த சுக்கிரன் ஒருகண்கெட்டுவெளியேவர அச்சபையிலுள்ளோரால் ஒருவன்கொடுப்பதைப்பொறாமையால்தடுப்பவன்இப்படி கேட்டையடைவானென்று இகழப்பட்டான்—(ஆகலால் ஒருவனுக்கொருவன்கொடுப்பதை தடுக்கலாகாதெனக் கண்டுகொள்க.)

## வெஃகாமை.

முன்னோனைப்போரின் முடுக்கிவிமானத்தை
என்னோகைக்கொண்டா னிரங்கேசா— அன்னோ
நடுவின்றிநன்பொருள் வெஃகிற்குடிபொன்றிக்
குற்றமுமாங்கேதரும்.

(என்பது) ஒருவன்பிறர்க்குரிய பொருளைக்கொள்ளுதல்நமக்குஅறமல்லவென்னும்நடுவுநிலைமையில்லாமல்அவராதுநல்லபொருளை அபகரிக்கவிரும்பினால்அவ்விருப்பு அவன்குடியைக்கெடுத்து பலகுற்றங்களையும்அப்போதேயவனுக்குக்கொடுக்குமென்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார்அதற்குதாரணமாக இராவணன்குபேரனைத் தமையனென்றறியாமல்அவனிடத்திலுள்ளபொருள்களைவிரும்பி யுத்தஞ்செய்துஅவனைஅளகாபுரியைவிட்டுத் துரத்திவிட்டுஅவன்பொருள்களையெல்லாங் கொள்ளைகொண்டு சங்கநிதிபதுமநிதி புஷ்பகவிமானத்தையு மெடுத்துக்கொண்டதால்இரகுநாயகர்இலங்கைக்குப்போய்இராவணன்முதலிய அவன்குடும்பங்களையுங்கொன்று குபேரனையழைத்து அவன்பொருள்களை யெல்லாம்

அவனுக்கேகொடுத்துவிட்டார்.-(ஆகலால்உலகத்தில் ஒருவன்பொருளைம ற்றொருவன்விரும்பிவஞ்சிப்பதால் கேடுவருமெனக்கண்டுகொள்க.)(௰அ)

## புறங்கூறுமை.

தக்கதுரியோதனன்பாற் சார்ந்தசகுனியைப்போல்
இக்குவலயத்திலிரங்கேசா—வெட்கா
பகச்சொல்லிக்கேளிர்ப் பிறப்பாகச்சொல்லி
நாட்பாடறேற்றாதவர்

(என்பது)கூடிமகிழும்படி இனியசொற்களைச்சொல்லி அயலாரோ டுசிநேகஞ்செய்தலை தமக்குறுதியென்று அறியாதவர்தம்மைவிட்டு நீங்கு ம்படி புறங்கூறிதமது சுற்றத்தாரையும் பிரியப்பண்ணுவரென்று நாயனார் திருக்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக துரியோதன னையும் பாண்டவர்களையும் சகுனியானவன்பகையுண்டாக்கிசூதாடுதலினா லே இராச்சியத்தையபகரிக்கச்செய்து உபயவாதிகளையும் மிகுந்த வயிரிக ளாகினபடியால. துரியோதனாதியர்மடிந்து பாண்டவர்வம்சத்தில் ஐவரல் லாமல் சகலருமடிந்து இவ்வளவுகபடஞ்செய்தசகுனியுமடிந்துநாகத்தையு மடைந்தான்.—(ஆகலால் உலகத்தினிடத்து புறங்கூறுதலினாலே தானுமட டிந்து நாகத்தையுமடைவானெனக் கண்டுகொள்க) (௰கூ)

## பயனில்சொல்லாமை

வேந்தைதவநிட்டன் வியத்தல்பழுதென்றமுனி
ஏந்துதவந்தோற்றனிசங்கேசா—ஆய்ந்தக்கால்
சீர்மைசிறப்பொடு நீங்கும்பயனில்
நீர்மையுடையார்சொலின்

(என்பது)பயனில்லாதசொற்களை நுணைந் தன்மையை யுடையவர் சொல்லுவராயின்-அவரதுமேம்பாடானது அதனால்வரும்நன்குமதிக்கப்ப டுதலுடனே அவரிடத்திருந்துநீங்குமென்றுநாயனார்குறளில் திருவாய்மல ர்ந்தருளினார். அதற்குதாரணமாக தேவேந்திரனுடைய சபையிலேபூவுலக த்தரசர்களிலே கருமமுஞ் சத்தியமுமுள்ளவன் அரிச்சந்திரமகாராசனெ ன்று வசிட்டர்சொல்ல,அவர்வசனத்தை நிந்தித்துஅவ்வரசனிடத்து அக ர்மமுங் குடியாகவிருக்குமென்றுபயனில்லாதசொற்களைச்சொல்லி விசுவா மித்திரன்பூமியினிடத்துவந்துஅரிச்சந்திரனை அநேகவிதங்களினாலேசோ தித்தும் அவன்சத்தியந்தப்பாதத்தினாலே விசுவாமித்திரன்தேவசபையில் சொல்லிவந்தசபதமுந்தோற்று கீர்த்திநஷ்டம்வந்ததுமன்றி தான் பண் ண்ணினதபசுமிழந்தான்.—(ஆகலால்பூமியினிடத்து பலருங்கூடியசபை

யில்பயனில்லாதவசனங்களைச்சொன்னவன் பெருமை கெடுமெனக்கண்டு கொள்க.) (உஎ)

## தீவினையச்சம்.

காளமுநிபாண்டவர்மே லேவுங்கடிவிழுங்க
எளிதமாஅனிரங்கேச—நாளுந்தான்
தீயவைதீய பயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப்படும்.

(என்பது) இன்பத்தின்பொருட்டு ஒருவன்செய்யும் தீவினைகள் பின்னே துன்பங்களை அவனுக்குத்தருகலால் அப்படிப்பட்ட தீவினைகள் தீயினுமதிகமாக அவனஞ்சப்படுமென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார், அதற்குதாரணமாககாளமாமுனியானவன் துரியோதனன்வார்த்தையைக்கேட்டு பாண்டவாளைக்குறித்து வாரணயாகம்பண்ணி அந்தயாகத்தில் பூதத்தையுண்டாக்கி அந்தப்பூதத்தையனுப்பிப் பாண்டவாளைந்துபேரையும் கொன்றுபோட்டுவரச்சொல்லிஏவினான், அதுகாரியந் தருமதேவதையறிந்து பாண்டவர்களையழைத்துப் போய்கொடுந்தூரம் அலையச்செய்து தண்ணீர்தாகமுமுண்டாக்கி நச்சுப்பொய்கையிற் றண்ணீர்குடிப்பித்துஐவரையும்மரணமூர்ச்சையாகப்பண்ணிவித்தாள், அப்போது பூதமானது புறப்பட்டுப்பாண்டவாளைத் தேடித்திரிந்து நச்சுப்பொய்கைக்கரையிலேவந்துபார்த்தபோது பாண்டவரைந்துபேருஞ்செத்துக்கிடக்கிறதைக்கண்டுகோபங்கொண்டு செத்தப்பிணத்தின்மேலேஎன்னையனுப்பினையென்று மீண்டுவந்து அனுப்பியகாளமாமுனியையெடுத்து விழுங்கிவிட்டது,பின்பு தருமதேவதைபாண்டவாளைவரையும் எழுப்பிவிட்டாள்.—(ஆகலால்உலகத்தில் ஒருவற்குப் பொல்லாங்குசெய்தவனையே அதுசூழுமென்றுகண்டுகொள்க.)

## ஒப்புரவறிதல்.

அந்தணர்மேன்மைபரியாமற்சர்ப்பவென்றே
இந்திரன்பாம்பானனிரங்கேசா—முந்தவே
ஒப்புரவினால்வருங் கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட்டக்கதுடைத்து

(என்பது.) உபகாரஞ்செய்ததினாலே ஒருவனுக்குப் பொருட்கேடு வருமென்பவருண்டாயின் அக்கேடானதுஒருவன் தன்னைவிற்றாயினும்வாங்குந்தகுதியையுடையதாகுமென்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குமேற்கோளாக பூர்வத்தில் நகுஷனென்கிறவரசன் நூறுஅசுவ

மேதயாகஞ்செய்து இந்திரப்பட்டத்துக்குவந்து இந்திராணியி னிடத்துப் போகவேண்டிய விருப்பத்தால்சத்தரிஷிகளுந்தாங்கிச்செல்லும் பல்லக்கின்மீதேறிப்போகும்போது ரிஷிகளதுபெருமையுந்தனதுசிறுமையுந்நோக்காது விரைவாகச்செல்லவேண்டுமென்னுங்கருத்தால்சீக்கிரமென்னும்அருத்தத்தையுடைய சர்ப்பசர்ப்பவென்னுஞ் சமஸ்கிருத மொழியைச் சொல்லி தன்காலினாலழுத்த அதுமுன்னேதாங்கிச்செல்லும் அகஸ்தியர் தோளையழுத்த அவர்கோபித்து நீசர்ப்பமாகப்போவாயென அவ்வாறே நகுஷன்மலைப்பாம்பாகி பூமியில் நெடுங்காலஞ் சஞ்சரித்தான்.—(ஆதலால் பெரியோர்களது பெருமையுந்தன்சிறுமையுமறிந்து நடக்கவேண்டுமெனக்கண்டுகொள்க.) (உஉ)

## ஈகை.

அங்கியுங்குண்டலமு மாகண்டலற்களித்தான்
இங்கிதமாக்கன்ன னிரங்கேசா—மங்கியே
சாதலினின்னாத தில்லையினிதூஉம
ஈதலியையாக்கடை.

(என்பது)ஒருவனுக்கு இறத்தல்போல துன்பஞ்செய்வதொன்றுமில்லை அப்படிப்பட்ட இறத்தலும்வறியவர்க்குக்கொடுத்தல் முடியாதவிடத்து இன்பஞ்செய்வதாகுமென்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினர். அதற்குதாரணமாக தேவேந்திரன்பிராமண வடிவங்கொண்டு கன்னனிடத்துவந்து உன்கவசகுண்டலங்களை எனக்குக்கொடுக்கவேண்டுமென்று கேழ்க்க, சூரியன்உன்சரீரத்தோடுகூடப்பிறந்து பிராணரட்சணையாகவிருக்கிற உன்கவசகுண்டலத்தை கொடாதேயென்றுசொல்லியும் அவர்பேச்சைக்கேளாமல் யாராவதுநம்மிடத்திலுள்ள பொருளை கேட்டவர்களுக்கு கொடாமலில்லையென்கிறதைவிட சாகிறதுமேலானதென்றுகருதி இந்திரனுக்குக்கவசகுண்டலத்தைக்கொடுத்துக் கீர்த்திபெற்றான்.—(ஆதலால் உலகத்தில்இல்லையென்றிரந்தவர்களுக்குகொடுத்தலே சிறப்புடைத்தெனக்கண்டுகொள்க.) (உ௩)

## புகழ்.

மும்மையுலகு முகுந்தனைத்துதிக்கும்
எம்மையாட்கொண்ட விரங்கேசா—செம்மையாத்
தோன்றிற்புகழொடு தோன்றுகவஃதிலார்
தோன்றலிற் றோன்றாமைநன்று.

(என்பது)மனிதராய்ப்பிறந்தால் புகழுங்கேதுவாகிய குணத்தோடுபிறக்கக்கடவர் அக்குணமில்லாதவர் மனிதராய்ப்பிறக்கலினும்விலங்கு

களாய்ப்பிறத்தல் நல்லதென்று நாயனார்குறளில்திருவாய மலர்ந்தருளினார் அதற்குதாரணமாகமுசுகுந்தச்சக்கிரவர்த்தி அரசாளுநாளில்துவாதசவருஷ பஞ்சம்வந்து அதனால்சனங்கள் வருந்தப் போகப்பூமியைக்கண்டித்து ஊற்று ண்டாக்கி அந்தத்தண்ணீரைக்கொண்டுபூமியிலுள்ளபயிர்களைவிளைவித்து பயிர்களையும் இரட்சித்தார், தேவேந்திரனைக்கட்டிக்கொண்டுபோனஅரக்க னைக்கொன்று, இந்திரனுக்குத்தேவலோகத்தைப்பட்டங்கட்டிவித்து தியாக ராயக்கடவுளைப் பூலோகத்திற்கொண்டுவந்து பிரதிஷ்டைசெய்வித்து மே லானகீர்த்திபெற்றார்.—(ஆதலால்உலகில்கீர்த்திமானாய்ப்பிறத்தலேமேலா னதெனக்கண்டுகொள்க.)

(உ௰)

முதலாவது-இல்லறவியல் - முற்றிற்று.



# மூன்றாவது-காமத்துப்பால்.



## அருளுடைமை.

வஞ்சப்புறவினுடன் வான்றுலையிலேறினான்
இன்சொற்சிபிமன்னிரங்கேசா—எஞ்சாமல்
மன்னுயிரோம்பியருளாள்வாற்கில்லென்ப
தன்னுயிரஞ்சும்வினை

(என்பது)நிலைபேருடையஉயிர்களைக்காப்பாற்றிஅவைகளிடத்தே அருளுடையவனாயிருப்பவனுக்கு தன்னுடையவுயிர் அஞ்சுதற்கேதுவாகிய பாவங்களானவை உண்டாகாதென்று அறிந்தோர்சொல்லுவரென்றுநாய னார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக ஈச்சுவரன் இய மனைப்புறாவாகும்படிசெய்து தான்வேடனாகி வுருவங்கொண்டு அந்தப்புறா வைத்துரத்திவரும்போது புறாபறந்துசிபிச்சக்கிரவர்த்தியிடத்துவந்து சர ண்புக, அப்பொழுது புறாவைத்துரத்திவந்தவேடன் அரசனைப்பார்த்து இ ந்தப்புறாவைநான் நெடுந்தூரத்திலிருந்து துரத்திவந்தேன்என்கையிற்பிடி படுகிறசமயத்தில் உம்மிடத்தில்வந்து சரண்புகுந்தது, எனக்கானால்பசியா ல்மூர்ச்சையாகவருகிறது புறாவைத்தாருமென்றுகேட்க அப்பொழுதுஅ ரசன்பார்த்து இனிவேடன்சும்மாப்போகான்என்றறிந்துவேடனைப்பார்த்து நம்மிடத்தில் அடைக்கலமாகவந்தபுறாவைவிடுகிறதில்லை இந்தப்புறாவுக்கு ச்சரிநிறையாகவேதேமாம்சங்கொடுக்கிறேனென்றுசொல்ல. அப்பொழுது வேடனானவன் இந்தப்புறாவுக்குச்சரிநிறையாக உனதுசரீரத்தி லிருக்கப்ப

ட்டமாம்சத்திலேஅறுத்து நிறுத்துக்கொடுத்தால்நான் போவேனென்று சொல்லஅரசன் அதற்குச் சந்தோஷித்துதராசுகட்டிபுறாவையொருதட்டிலேவைத்து தன்சரீரத்திலிருக்கும் மாம்சத்தைச்சிறிதுசிறிதாகஅறுத்துமற்றொருதட்டிலேவைக்க புறாவின்தட்டுக் கனமாகத்தாழ்ந்தமையால்அந்தத்தட்டிற்றானுமேறினான், அப்போது பாடசிலன்சந்தோஷித்து இடபவாகனரூடராக எதிரேவந்து காக்ஷிகொடுத்து கைலாயபதம்அரசனுக்குக்கொடுத்தார். (ஆதலால் உலகத்திலிருக்கும் சகலவுயிர்களையுந் தன்னுயிர்போல அருளுடனே நினைப்பவர்கள், தன்னையறியாமற்செய்த பாவங்களுநீங்கிக் கைலாயமடைவார்களெனக்கண்டுகொள்க) (௨௫)

## புலான்மறுத்தல்.

அந்தணனைக்கன்மாடபாதனருந்தினான்
இந்தவுலகத்திலிங்கேசா—வந்த
பொருளாட்சிபோற்றாதார்க்கில்லையருளாட்சி
ஆங்கில்லையூன்றின்பவர்க்கு.

(என்பது.) பொருளினாலே பயன்கொள்ளுதல் அதனைக்காப்பற்றாதவருக்கு இல்லாததுபோல, அருளினாலேபயன்கொள்ளுதல்புலாலுண்பவருக்கு இல்லையென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக கன்மாடபாதனாகிய அரசன்வேட்டைக்குப்போனவிடத்தில் ஒரராக்கன்வந்தெதிர்த்தான், அப்போதரசனானவன், அந்தவராக்கனைச் சங்கரித்துதன்பட்டணம்வந்துசேர்ந்தான் பின்பு அந்தஇராக்கதன்சகோதரன் இராசாவைக்கெடுக்கநினைத்து பிராமணவேடங்கொண்டு அரசனைச்சந்தித்துச் சுயம்பாகியாயிருந்து சமையற்பண்ணிக்கொண்டிருந்தான், இப்படியிருக்குநாளையில் சத்தஇருடிகளும் அந்தவரசனிடத்துவந்தபோது சுயம்பாகியையழைத்துச்சத்தவிருடிகளுக்குஞ் சமையல்செய்துபடைக்கும்படி யுத்தரவுபண்ணினான், அதைக்கேட்டவிராக்கதன் இதுசமயமென்றுஇருடிகளுக்கு நரமாம்சத்தைப்பருப்பாகச் சமைத்துப்படைத்தான் அதையவர்கள்புசித்து நரமாம்சமென்றறிந்து கோபமாகி இராக்கதஆகாரத்தைபிராமணருக்குச்சமைத்து இடுவித்தாயாகையில் நீஅரக்கனாகப்போவாயென்றுஅரசனுக்குச்சாபமிட்டார்கள் அப்போதரசனுங்கோபமாகி நீங்கள்நிராதாரமாக என்னைச்சபிக்கலாமாவென்று அரசனும் இருடிகளைச் சபிக்கவெண்ணிக்கையில்சலமெடுத்தான் அரசன்தேவியானவள் ஓடிவந்துபெரியவர்களையெதிர்க்கலாகாதென்று தடுத்தபடியால்அந்தசலத்தைத்தன்காலில்

விட்டான் அதனாலேஅவன்கால்கருத்துக் கன்மாடபாதனானான்அப்போது அரசன் சத்திரிஷிகளையுநமஸ்காரம்பண்ணி என்மனதறியாமல்வந்தகாரியத்திற்கு தாங்கள்பொறுத்திரட்சிக்கவேணுமே ஆதலால்இந்தச்சாபவிமோசனகாலமெப்போ வென்றுகேட்டான் அப்போருஷிகள் நீபன்னிரண்டுவருடம் இராக்கதனாகவனத்திலேசஞ்சரித்தபின்பு இந்தச்சாபநீங்குமென்று சொல்லி சுயம்பாகியாகயிருந்தஇராக்கதனைச்சாம்பலாக எரித்துப்போட்டு அவர்கள்போய்விட்டார்கள் அதின்பிறகுஅரசன்இராக்கதனாகிஆரணியத்தில்சஞ்சரித்துக்கொண்டு திரிகிறநாளையில் ஒருநாள்பிராமணனும் அவருடையமனைவியுமாகஅந்தவனத்துவழியாக வரும்போது இந்தவரக்கன்கண்டுபிராமணனைப்பிடித்துக்கொண்டான் அவன் மனைவியானவள் இவனரசனென்றறிந்து இதனால்பிரமத்தியுண்டாகும் எனக்குமாங்கல்யபிட்சைதரவேண்டுமென்றுகேட்டாள் அவன்இராக்கதரூபமானதால் தருமமுந்தயையுமில்லாமல்பிராமணனையெடுத்துவிழுங்கினான் அதுகண்டுபார்ப்பினிவருத்தப்பட்டுநீஇராக்கதஉருவம்விட்டு உன்பட்டணத்திற்போனகாலத்தில்உன்மனைவியைத்தீண்டினையாகில்உன்தலைசகஸ்திரபத்தலாகவெடித்துப்போவாயென்றுசாபமிட்டாள்பின்பு அரசனானவன்பன்னிரண்டுவருடமுந்தீர்ந்துஅரசனாகித்தன்பட்டணம்வந்து அந்தப்புரத்திற்போய்த்தன்தேவியைத்தீண்டப்போனான் அப்போதரசனுடையதேவிமேற்சொன்னசாபத்தையறிந்துதன்னைத்தீண்டாதேயென்றாள் அப்போதரசன்வசிட்டரை யழைப்பித்து இந்தச்சாபத்துக்கு நிவர்த்தியென்னவென்றுகேட்க அவர்பதிவிரதைசாபந்தீர்க்கக்கூடாதென்றுசொல்லி புத்திரகாமேஷ்டியாகஞ்செய்வித்துயாகபிண்டத்தாலேபுத்திரனுண்டாக்கினார் — (ஆதலால் மாம்சம் பொசிக்கும்பொருட்டாகஎந்தச்சீவனையாவது வதைபண்ணவேண்டிவருமாதலால் அதைவிலக்கவேண்டுமெனக் கண்டுகொள்க.) (உக)

## தவம்.

வேந்தந்தணர்குலத்துமேலாகியதன்மை
ஏய்ந்துதவத்தேய்ந்தானிரங்கேசா — மாந்தர்க்கு
வேண்டியவேண்டியவாங்கெய்தலாற்செய்தவம்
ஈண்டுமுயலப்படும்.

(என்பது) முயற்சிசெய்தால் பெறவேண்டியபயன்களை வேண்டியபடியேமறுமையிற்றும் பெறலாமாதலால்செய்யத்தகுவதாகிய தவமானது இம்மையிலறிவுடையோராலே முயலப்படுமென்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குக்காரணமாகஅந்தத்திரியனாகியவிசுவாமித்திரர்,

அந்தசெனனத்திலேதானே தவசுபண்ணிபிரமரிஷியாகியகீச்சன் தன்மைய
டைந்ததிரிசங்குமகாராசனுக்கு நட்சத்திரபதவியைக்கொடுத்ததுமன்றிபிர
ம்மசிருஷ்டிக்கெல்லாம்பிரிதியாகச்சிருஷ்டித்துத் தாமுஞ்சத்தரிஷிகளொ
டொருவரானார்—(ஆகலால்தவம்பண்ணினபேர்கள்எந்தக்காரியத்தைநினை
த்தாலும் அந்தகாரியங்களைகூடுமெனக் கண்டுகொள்க) (உஎ)

## கூடாவொழுக்கம்.

சங்நாசியாய்விஜையன்றூர் கழலைக்கொண்டகன்றூன்
இங்நாலிலம்போற்றிரங்கேசா—சொன்னால்
வலியினிலைமையான்வல்லுருவம்பெற்றம்
புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று.

(என்பது) மனத்தையடைக்கும் வல்லமையில்லாத இயல்புடைய
வன் அவ்வல்லமையுடைய யவரதுவேடத்தைக்கொண்டு மனம்போனவழி
போகுதல்பசுவானதுகாவற்காரர் துரத்திருக்கும்படிபுலியினதுதோலை
ப்போர்த்துக்கொண்டுபயிரைமேய்ந்தாற்போலுமென்றுநாயனார்குறளில்தி
ருவாய்மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக அருச்சுனன் சங்நாசிவேடங்
கொண்டுதுவாரகைக்குப்போய் பலபத்திராமனைக்கண்டுசாதுர்மாதவிரத
ம்அனுஷ்டிக்கவேண்டுமென்றுகேட்கஅவரதற்குடன்பட்டுதம்முடையதங்
கையாகியசுபத்திரையைஅவரதுவிரதநிறைவேறுகிறவரையில அவருக்கு
வேண்டியவுபசாரஞ்செய்யும்படி கட்டளையிட்டு இருக்கச்சொன்னார் அப்படி
யிருக்குஞ்சமயத்தில் சுபத்திரையைமயக்கிக்காந்தருவ விவாகஞ் செய்துக்
கொண்டு சிலநாளைக்குப்பின்பு அப்பெண்ணையுமெடுத்துக்கொண்டுஇந்திர
ப்பிரஸ்தமேபோனான்பின்பு பலபத்திராமருங்கிருஷ்ணதேவரும்இந்தக்க
படத்தையறிந்துமோசம்போனோமென்றுநினைத்துஇந்திரபிரஸ்தமேவந்து
இருவருக்குங்கலியாணஞ்செய்துவைத்துவிட்டுப் போனார்கள்—(ஆகலால்
லாக்கொன்றுமனமொன்றுமான தவவேடத்தைத்தம்ப வொண்ணா தென்று
கண்டுகொள்க.) (உஅ)

## கள்ளாமை.

உத்தங்கர்தோலையொளித்தநாகக்குலங்கள்
இற்றபுகையாலிரங்கேசா—மற்றுலகில்
உள்ளத்தாலுள்ளலுந்தீதேபிறன்பொருளைக்
கள்ளத்தாற்கள்வேமெனல்.

(என்பது) குற்றங்களைத்தமதுநெஞ்சிலே நினைத்தலுந்துறந்தா

ர்க்குப்பாவமேயாகுமாதலால்பிறனதுபொருளை அவனறியாதவகையினாலே
வஞ்சித்துக்கொள்வோமென்று நினையாதிருக்கக்கடவரென்று நாயனார்குற
ளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குகாரணமாகஉத்தங்கனாகிய பிராமண
ன் ஒருபாத்தியாயரிடத்தில் சகலவேதசாஸ்திரபுராணாகமங்களும்படித்துநி
றைவேறியபின் ஆசாரியனைப்பணிந்துகுருதட்சணையென்னவேண்டுமென்
றுகேழ்க்ககுருபத்தினியானவள்வந்து நாகரத்தினமிழைத்தகொந்தளஓலை
குருதட்சணையாகவெனக்குக்கொடுக்கவேண்டுமென்று கேட்டாள்உத்தங்க
னதற்குச் சம்மதித்துஅவர்களால்அதுஇருக்குமிடமறிந்துகொண்டுஉத்தங்
கன்அந்தப்பட்டணத்தைநாடிப்போகும்போது பசியினாலேகிடைத்த கோ
மயத்தைப்பட்சித்துச்சுத்தாசமனம்பண்ணாமல் பட்டணத்திற்போய்சேர்ந்
துஅரசனைக்கண்டுதான்வந்தகாரியத்தைச்சொல்லி உன்மனைவிகாதிலுள்ள
நாகரத்தினமிழைத்தஒலையைகொடுக்கவேண்டுமென்றுகேழ்க்கஅரசனதற்
கிசைந்து அந்தப்புரத்திற்சென்றுதன்மனைவிகையில் வாங்கிக்கொள்ளும்ப
டிசொல்லியனுப்பஉத்தங்கனப்படியே அந்தப்புரத்திற்சென்றுஅந்தவம்ம
னைத்தேடஅம்மாள்அவர்கண்ணுக்குபுலப்படாமையால்மீண்டும் அரசனி
டத்தில்வந்து அந்தம்மனைக்காணேனெனஅரசன்யோசித்து நீரசுத்தராய்ப்
போனதால்எம்முடையகண்ணுக்குத்தோன்றவில்லையெனஅப்பொழுதுபி
ராமணனெழுந்து ஸ்நானஞ்செய்துசுத்தாசமனமுஞ்செய்துகொண்டு அந்தப்
புரத்திற்குப்போனான்அப்பொழுதுஅரசன்தேவியெதிரேவந்துநிற்கக்கண்
டுதான்வந்தகாரியங்களைச்சொல்லி ஒலையைக்கேட்டவுடனேஅந்தவம்மாள்
தன்காதிலணிந்திருந்தஒலையைக்கழற்றிக்கொடுத்து இந்தவோலையைஅரவ
ங்கள்எடுத்துப்போய்விடும் சாக்கிரதையாய்க்கொண்டுபோமென்று சொன்
னாள்அப்படியேஒலையையெடுத்துக் கொண்டுவரும்போது சூரியன் அஸ்த
மனகாலமாயினதால் உத்தங்கன்ஒலையையோரிடத்தில்வைத்துசந்தியாவந்த
னம்பண்ணிக்கொண்டுவந்துபார்ப்பதற்குமுன்னே தட்சகனென்னும் பாம்பு
அவ்வோலையையெடுத்துக்கொண்டுநாகலோகத்திற்போயிற்றுபிராமணனவ
ந்துபார்த்துகாணாமையால்அந்தப்பாம்புநடந்துபோனசுவட்டின்வழியேசெ
ன்றுநாகலோகத்திற்போய்நாகங்களைக்கேட்டபோது அவைகளறியோமென்
றுசாதித்தபடியால்உத்தங்கன்வெளியேவந்து இந்திரனைநோக்கித்தப
சுசெய்யஇந்திரன்பிரசன்னமாகிதானேறிவந்த உச்சைச்சிரவமென்னுங்குதி
ரையின்வலதுசெவியில்பெரும்புகையுண்டாக்கிஅந்தப்புகைபாதலமெங்கு
ம்நிறைந்துமூடிக்கொண்டதால்அதனால்பலவிதமானபாம்புகளெல்லாஞ்செத்

தட்போக அதுகண்ட மகாஜநங்களெல்லாம் பயந்து ஓலையைக்கொண்டுவந்
து கொடுத்தனர் உத்தங்கன் அந்த ஓலையைக்கொண்டுவந்து தன் குருபத்தி
னிகையில் கொடுத்தான்.—(ஆதலால் பிறர்பொருள்களைக் களவுசெய்வதி
னால் அர்த்தசேதமும் பிராணஆனியும் வருமெனக்கண்டுகொள்க)(௨௬)

## வாய்மை.

மூவாரிச்சந்திரற்கு முன்னின்றுகாட்டியேபோல்
எவர்பெற்றார்மேருவிரங்கேசா—பூவில்
மனத்தொடுவாய்மைமொழியிற்றவத்தோடு
தானஞ்செய்வாரிற்றலை.

(என்பது)ஒருவன் தன்மனத்தோடுபொருந்தஉண்மையைச்சொல்லுவா
னாயின் அவன் தவத்துடனே தானத்தையுமொருமிக்கச்செய்வாரினுஞ்சிறப்பு
டையவனாவானென நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குகா
ரணமாக அரிச்சந்திரமகாராசன் விசுவாமித்திரர் செய்தகபடத்தால் தன்
னுடையசதுர்விதசேனைகளையும்அயோத்தியாநகரத்தையுந்தோற்று தன்
மனைவியையும் குமாரனையும் விற்றுதானுஞ்சண்டாளனுக்கடிமைபட்டுஞ்
சத்தியந்தவறாது நின்றமையால் பிரம்மா விஷ்ணு ருத்திரனாகிய மும்மூர்
த்திகளும் சகலதேவர்களும் ரிஷிகளும் ஏககாலத்தில்வந்துகாட்சிகொடுத்
தார்கள்.—(ஆதலால்சத்தியவானுக்குச் சகலதேவர்களும் பிரசன்னமாவா
ரெனக்கண்டுகொள்க.) (௨௭)

## வெகுளாமை.

தாக்கிமிதிவிட்டார்சாபத்தாற்றம்முடல்வீட்
டேக்கமுற்றானேருவிரங்கேசா—நோக்கினல்
சொல்லாவிடத்துச்சினந்தீது சொல்லிடத்தும்
இல்லதனிற்றீயபிற.

(என்பது)ஒருவனதுகோபமானது, தனின் வலியவர்மேலுண்டா
குமாயின் அதுதனக்கே பொல்லாங்கைத்தரும், தன்னின்எளியவர்மேலு
ண்டாகுமாயின் அக்கோபத்தினும் தீமையுடையவைவேறேயில்லை யென
நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார்.(அதற்குகாரணமாக நிமிச்சக்கி
ரவர்த்தி சரீரசொர்க்கயாகம் பண்ணவேண்டுமென்றுவசிட்டரைக்கேழ்க்க
அப்படியேயாகத்தைத் துவக்கென்றுசொல்லித் தான் தெய்வலோகத்துப்
போய் வருகிறதாகச்சொல்லிசென்று அவ்விடத்தில் சிலநாளிருந்துயாகநடக்
துவருஞ் சமயத்தில்வந்துமுன்தான் சொன்னதைமறந்து என்னுத்தரவி
ன்றி யாகத்தைத் துவக்கி நடத்தினமையால் சரீரத்தைவிட்டுப்போவாயெ
ன்று சபித்தார் அப்போது அரசனுங்கோபித்துஉம்மிடஉத்தரவின்பேரில்

ளவு எவ்வளவென்றுகேட்க ஒருபிரமதேவரிறந்தால் எனக்கு ஒருமயிருதிரும் இப்படிமூன்றரைகோடி பிரமாக்களிறந்தால்மூன்றரைகோடிரோமம்உதிரும், அப்பொழுது எனக்கு மரணமுண்டென்றுசொல்ல, அப்பாலவரையுமிட்டுக்கொண்டு அட்டகோணமகாரிஷி யிடத்திற்போய் உமக்கு ஆயுளளவு எவ்வளவென்றுகேட்க அவர் இப்படிப்பட்ட உரோமமகாரிஷியொருவரிறந்தால் எனக்கு ஒருகோணநிமிரும், இவர்களெட்டுப்பேரிறந்தால்எட்டுக்கோணமுநிமிர்ந்தானுமரணமடைவேனென, இப்படிக்கொத்தநீர்வீடு பெரிதாகக்கட்டிக்கொண்டதில் வசியாமல் ஒருகுச்சுவீடுகட்டிக்கொண்டிருக்கிறீர் அதிலும் பாதிசரீரம் உள்ளிலும் பாதிசரீரம்வெளியிலுமாகவிருக்கிறீர் இதென்னகாரணமென்றுகேட்க. அதற்கவர்சரீரம் நீரின்மேற்குமிழிபோல் நிலையில்லாமையாகவிருக்கின்றதே இதைநம்பிபெரியவீடு கட்டிக்கொள்ளுவதாலென்னபிரயோசனமென்றார் அதைக்கேட்டபிரமன் தனதுகர்வமடங்கிப்போனான். (ஆகலால் சரீரம்நிலையல்லவென்றுணர்ந்து துறவையடையவேண்டுமெனக் கண்டுகொள்க.)

(௧௪)

## துறவு.

பீடுபெறுபட்டணத்துப்பிள்ளையைப்போலேதுறவார்க்
கீடுதருமோவிரங்கேசா — நீடுலகில்
யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்

(என்பது)தானென்றுந் தன்பொருளென்றுநினைக்கும்படி செய்விக்கிற உலகமாய்கையாகிய ஆங்காரத்தையறுத்து பிரமத்தியானமுற்று, துறவிலேநின்றவன், சாலோக, சாமீப, சாரூபமென்கிற மேலானபதவிகளைக்கடந்து சாயுச்சியமாகிய வுயர்ந்தபதவியையடைவானென. நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குகாரணமாக பட்டணத்துப்பிள்ளை மருதீசருடைய கருணையால் ஞானபோதத்தை யடைந்து எண்ணிறந்ததிரவியங்களையும் சம்சாரமாய்கையையுந் துறந்து, பிரமத்தியானமுற்று, மோட்சத்தையடைந்தார்.—(ஆதலால்துறவிலேநின்றவர் மோட்சத்தை யடைவார்களெனக்கண்டுகொள்க)

௧௫

## மெய்யுணர்தல்

கெற்பத்திலேசுகனார்கேடில்பொருளைக்குறித்தார்
இப்புதுமைக்கன்பாமிரங்கேசா — உற்பத்தி
ஐயுணர்வெய்தியக்கண்ணும்பயனின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு.

(என்பது.) மெய்ம்மையறிவில்லாதவர்க்கு ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம், இவ்வைந்துபுலன்களிலுஞ் செல்லுதலால்ஐந்தாகியவுணர்வு அப்புலன்களைவிட்டுத் தமக்குவசப்பட்டவிடத்தும், அதனாலே பிரயோசனமில்லையென நாயனாருறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக வேதவியாசர் திலோர்த்தமைமேல்மோகமாய் அவள்மேல்விழ, அப்போது அவள்கிளியாகிப்பறந்தோடினாள், இருடியுங்கிளியுருவங்கொண்டு துரத்திப்போய் அவளைக்கூடினார். அவள்கருப்பத்திலே சுகர்உற்பவித்து பிரம்மக்கினியாய் பன்னிரண்டுவருடம் விட்டுணுமாய்கைக்குப்பயந்து, இந்திராதிதேவர்கள் யார்சொன்னாலுங்கேளாமல். கருப்பத்தைவிட்டு வெளியில்வாராமல்உள்ளேதானேயிருந்தார், அப்போது விட்டுணுவானவர்வந்து கருப்பத்திலிருக்கிறசுகரைவெளியிலவரச்சொல்லியழைத்தார், சுகரானவர் எனக்கு உம்மிடமாய்கையில்லையாகில் வெளியில்வருகிறேனென்றார்-அதற்கவர்நம்மிடமாய்கையொருவரையும்விடாதே உனக்கில்லையென்றுசொல்லுவதெப்படியென சுகரானவர் ஒருகணப்போதேனும் உம்மிடமாய்கை யென்னைச்சாராமலாகில் வெளியில்வரேனென்றார். அதற்குவிஷ்ணுஒருபெரியகண்ணாடியில் ஒருவர்நின்று உழுந்தினைப்போட அதுவுருண்டுபூமியில் வருமளவுமென்மாயை யும்மையடையுமெனை, அதற்குச்சுகர்சம்மதித்துருட்டச்சொல்ல அப்படியே யொருகண்ணாடியைச் சாய்த்துவைத்து உழுந்தெடுத்துக்கொண்டுவாருமென, நல்லது உழுந்தைவிடுமென்றுவெளியில்வருவதுபோத்காட்டிஉழுந்துருண்டபின்புவெளியிலேயேவந்து பிரம்மக்கியானத்துடனே நின்றார், அப்போதுவிட்டுணுமாய்கை தன்னையடையாமற்போயிற்று—(ஆதலால் பிரம்மக்கியானம்வந்தவுடனே உலகமாய்கையற்றுமுக்த்தியுண்டாருமெனக் கண்டுகொள்க.) (௩௬)

அவாவறுத்தல்

தேசஞ்சொல்பத்திரகிரி சிந்தையின்மூவாசைவிட்டான்
ஈசன்பரவுபிரங்கேசா—பாச
அவாவினையாற்றவறுப்பிற்றவாவினை
தாங்வேண்டுமாற்றான்வரும்

(என்பது) ஒருவன் ஆசையினைமுழுதுமறுத்தால்அவனுக்குக்கொடாமைக்கேதுவாகியவினை தான்விரும்பும்வழியினாலேயுண்டாகுமெனநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக பத்திரகிரி இராச்சியம்பண்ணுகிறகாலத்தில் அவன் மூன்றூறு விவாகம் பண்ணினான் அவனுடையபிதாவாகிய கோவிந்தசாமி தனக்குஆபத்காலமாயிருக்குஞ்ச

மயத்தில் இதையறிந்து பிரம்மவீரியம் சுக்கிரகருப்பத்திலே யுற்பவித்ததால், அந்தவம்சம்பூமியிலே விருத்தியாயுள்ளவரையில் பிதாவுக்குநரகமென்று கஸ்திப்பட்டார் அதைப்பத்திரகிரிகேட்டுத் தனதராசாட்சியை விக்கிரமார்க்கனுக்குக்கொடுத்து மூந்நூறுதேவிமாரையும் அவரவ ரிச்சையானபடிபோகவிடுத்து தாம் மூன்றாசையும்விட்டுத்துறவிலேநின்றமையால்பிதாவுக்குமுக்தியுண்டாகி தானும்முத்தியையடைந்தான். (ஆதலால்ஆசையற்றவிடமேமோட்சமெனக்கண்டுகொள்க)

(௧௭)

௨௭ ம்.

சிந்துபதிதந்தையொடு தேர்விஜயனாலிறந்தான்
இந்துதவழிஞ்சியிரங்கேசா — முந்திவரும்
ஊழிற்பெருவலி யாவுளமற்றொன்று
சூழினுந்தான்முந்துறும்.

(என்பது) தன்னைவிலக்குதற்பொருட்டுத் தனக்குப் பகையாகியதுருபாயத்தைஆராய்ந்தாலும் தான் அவ்வுபாயத்தையாவது மற்றொன்றையாவது வழியாகக்கொண்டுவந்து அவ்வாராய்ச்சிக்குஊழ்முற்பட்டுநிற்கும் அதனால்ஊழ்போல மிகுந்தவலிமையுடையவை எவையிருக்கின்றனவென நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாக பதினெட்டு நாள் செய்யும் பாரதயுத்தத்திலே அருச்சுனன் காலையில் தேரேறிப்புறப்படும்போது என்மகன் இறந்ததற்குக்காரணம்யாரோ அவன்றலையை இன்று சூரியன் அஸ்தமிப்பதற்குள்ளாகஅறுத்துப் பூமியிற்றள்ளாமற்போவேனாகில் அக்கினிப்பிரவேசமாவேனென்று சபதங்கூறிப் புறப்பட்டுப்போகையில் துரியோதனன்சயிந்தவனைப் பூமத்தியிலவைத்துசுற்றிலும், அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர், இவர்களைநிறுத்தி, அவர்கட்குப்புறத்தில்துரோணாச்சாரியார், கர்னன், அசுவத்தாமன், சகுனி, சல்லியன், தம்பிமார்களோடு நூற்றுவரும் பதினோரக்குரோணிசேனைகளும், சகலராஜாக்களுஞ்சூழ்ந்திருந்து காக்கும்படிசெய்திருக்க இதுவுமன்றி சயிந்தவனுடைய தகப்பன் தன்மகன்றலையை அறுத்து எவன்நிலத்திற்போடுகிறானோ அவன்றலைசகஸ்திரபத்தலாய் வெடிக்கக்கடவதென்று தபசுபண்ண இப்படியிருக்குஞ்சமயத்தில் இருபத்தெட்டுநாழிகையாயிற்று அப்போது கிருஷ்ணன் ஏதுமோசம் வருகிறதென்று நினைத்து தனது சக்கராயுதத்தை யெடுத்து விட்டு சூரியனைமறைத்துவிட்டார் அப்பொழுது அருச்சுனன் அக்கினியை வளர்த்தச் சொல்லி, அவ்வக்கினியில் விழ ஆயத்தப்பட்டபோது துரியோதனன், மிகவுஞ்சந்தோஷித்து சயிந்தவனையானைமேலேறிவந்து இவ்வேடிக்கைபார்க்க வரவழைத்தான், கிருஷ்ணன்

துகண்டு அருச்சுனன் இதோ சயிந்தவன்வருகிறான் அவன்றலையைவாங்கென சூரியன்அஸ்தமயமானமாயிற்றே என்வாக்குத்தப்பிச்செய்யேனென சூரியனை யுன்கண்ணாற்கண்டால் செய்வாயோவென பனைமரப்போதிருந்தால் அவன்றலையை நறுக்கென்றறுப்பேனென உடனே சக்கரத்தைவரவழைத்துக்கொள்ள சூரியன் இரண்டுபனைமர முயரமாகக்கண்டு சீக்கிரத்தில்வில்லிலேவளைத்துஅர்த்தசந்திரபாணத்தால் அவன்றலையைக்கண்டித்து வாயுவாஸ்திரத்தால்அறுத்ததலையைக்கொண்டுபோய் கங்கையில் அர்க்கியங்கொடுக்கும்அவன் பிதாவின்கையில் வைக்க அத்தலையை யவன்கீழேவிட அவன்றலை சகஸ்திரபத்தலாய் வெடித்திறந்தான். (ஆதலால்ஊழையொருவராலும் விலக்கக்கூடாதெனக் கண்டுகொள்க.) (௨௰)

முதலாவது-அறப்பால்முற்றும்.



# இரண்டாவது-பொருட்பால்.



## இறைமாட்சி

ஒன்றிமதித்தா னுரோணிசகடைச்சௌரி
என்றும்புகாமலிரங்கேசா—நன்றும்
முறைசெய்துகாப்பாற்று மன்னவன்மக்கட்
கிறையென்றுவைக்கப்படும்,

(என்பது)தான் செங்கோன்முறைமையிற்செது—பிறர்வருந்தாமற் காத்தலுஞ்செய்யும்அரசனானவன்பிறவியினாலேமனிதனேயாயினும் மனிதர்களுக்குச்செயலினாலே கடவுளென்று வேறுவைக்கப்படுவனெனநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார் அதற்குகாரணமாகசனியீஸ்வரன் றோகணிசகடையிற்புகுந்தால்உலகத்திற்பன்னிரண்டுவருஷம் மழையில்லையென்று பருவதபாரிச சமுத்திரத்தைநாடி உயிர்கள் வலசை போகக்கண்டு தசரதமகாராஜன் தேரின்மேலேறிக்கொண்டு சனியீஸ்வரன் மண்டலத்திற்சென்று சகடையிற் புகுதவொட்டாமல்மறித்து யுத்தம்பண்ணிச்செயங்கொண்டுஒருகாலத்திலுஞ்சகடையிற் புகுதாமல்வார்த்தைப்பாடுகேட்டுக்கொண்டு அறுபதினாயிரம்வருஷம்ராச்சியபாரம் நீதியுடனேபண்ணினார், (ஆதலால் இராசியத்துக்குவரும் துன்பத்தைநீக்குமிறைவன் உலகத்துக்குக்கடவுளாவனெனக்கண்டுகொள்க) (௨௧)

## கல்வி.

மல்லல்வியாகரண மாருதிகற்கக்கருதி
எல்லவன்பின்போனதானிரங்கேசா—நல்ல
ஒருமைக்கட்டான்கற்ற கல்வியொருவற்
கெழுமையுமேமாப்புடைத்து,

(என்பது)ஒருவனுக்குத்தான் ஒருபிறப்பினிடத்துக் கற்றவித்தை யானது எழுபிறப்புகளிலும் போயுதவுதலை யுடையதாகுமென நாயனார்கு றளில திருவாய்மலர்ந்தருளினார். அதற்குகாரணமாக அநுமார் பஞ்சாசத் கோடிபூமண்டலத்தையும் அறுபதுநாழிகையிலே சுற்றிவருகிற சூரியபக வானிடத்துத்தான்வியாகரணங்கற்கவேண்டி அவன்றேருடன்கூடநடந்து அவனிடத்தி லுபதேசம்பெற்று அநேகருக்குத்தாம் உபதேசம்பண்ணி ப்பெருமையும இன்பமும்பெற்றார், ஆகலால் எவ்வளவு வருத்தப்பட்டாகி லுங் கல்வியைக்கற்கவேண்டுமெனக்கண்டுகொள்க (௩௰)

## கல்லாமை.

ஞானசம்பந்தருடனன்றுச்சமணரெதிர்த்
தீனமுற்றாரன்றோ விரங்கேசா—ஆன
அரங்கின்றிவட்டாடி யற்றேநிரம்பிய
நூலின்றிக்கோட்டிகொளல்.

(என்பது) ஒருவன்றானிரம்புதற்கேதுவாகிய நூலகளையில்லாமல் சபையினிடத்தே தானொன்றைச்சொல்லுதல் வகுப்பிடத்தையின்றி உண் டையுருட்டுதல்போலுமென நாயனார்குறளில் திருவாய்மலாந்தருளினார். ஆதலால்அதற்குகாரணமாக மதுரையிலேபாண்டியராஜன்றனைபுசமணர் கல் சம்பந்தமூர்த்தியுடனேவாதுசெய்துசம்பந்தமூர்த்தியாற்சொல்லியபா டல் நீரிலும் நெருப்பிலுஞ்செயிக்க சமணராற்சொல்லியபாடல் இவ்விர ண்டிலுந்தோற்றுச் சமணர்கதபடியால் சம்பந்தமூர்த்திநாயனாரால் சமண ர்களெண்ணாயிரம்பேர் கழுவிலேற்றப்பட்டார்கள்(ஆதலால்குறைவறக்கல் லாதவர் வாதுசெய்யவொண்ணாதெனக்கண்டுகொள்க,) (௩௧)

## கேள்வி.

பாகவதங்கேட்டுப்பரிக்ஷித்தன்முத்திபெற்றான்
ஏகவுருவாயிரங்கேசா—சேக
இழுக்கலுடையுழியூற்றுக்கோலற்றே
ஒழுக்கமுடையார்வாய்ச்சொல்.

(என்பது)ஒருவருக்கு ஆபத்திலே நல்ல நடையை யுடையவரது

னையிற்பிறக்கின்றசொல் வழுக்குதலையுடைய சேற்றுநிலத்திலே ஊன்று கோல்போலுதவுமெனநாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலாலே அதற்குதாரணமாக சுகரிடத்திலே பரிக்ஷித்துமகாராசன் பாகவதபுராணத்தை கேட்டபடியால்தனக்கு விஷமரணமுண்டாயிருந்தும் அந்தப்பாவத்தால் நரகத்தையடையாமல் பரமபதத்தையடைந்தார். (ஆகலால்பெரியவர்களிடத்தில் புண்ணியகதைகளைக்கேட்டுச் சிந்திக்கவேண்டு மெனக்கண்டுகொள்க) (௬௨)

## அறிவுடைமை.

பீதரனைப்பார்த்தனன்றுசேர்த்தானரவுயர்த்தோனை
யாதவனைவுற்றானிரங்கேசா-ஓதில்
அறிவுடையராவதறிவாரறிவில்லார்
அஃதறிகல்லாதவர்.

(என்பது) வரக்கடவதை முன்னே யறிவல்லவர் அறிவையுடையவராவர் அவ்வரக்கடவதை முன்னேயறியமாட்டாதவர் அறிவில்லாதவராவாரென நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குகாரணமாக பாரதயுத்தத்தில் துரியோதனனும் அருச்சுனனும் தங்களுக்குப் படைத்துணைவேண்டிக் கிருஷ்ணனிடத்துக்குப்போனபோது அக்கிருஷ்ணன் தானிராயுதனாகநின்று தன்சேனைகளையுந்தசன்னமாக வரச்சொல்லி நிறுத்தி நானிந்தபாரதயுத்தத்தில் ஆயுதமெடேன் ஆதலாலென்னைவேண்டியவர்கள் என்னைக்கொண்டுபோகலாம் என்சேனைவேண்டியவர்கள் சேனைகளைக்கொண்டுபோகலாமென துரியோதனன் புத்தியீனனாதலால் யுத்தஞ்செய்தற்குதவியில்லாத கிருஷ்ணனுமெனக்கெதற்கு நமதுசேனைகளைக்கொடுமென அவ்வாறே கொடுக்கச் சேனைகளைக்கொண்டுபோய அவர்களோடுதானுமழிந்தான் அருச்சுனன் புத்திமானாதலால்கிருஷ்ணன் னிராயுதனாகவிருந்தாலும் அவர்தந்திரத்தால்வெல்லலாமென்றுகருதி அவனைவேண்டியவராகலால்சகலமையும்வென்று ஜெயத்தையடைந்தான். —(ஆகலால்புத்திமானுக்குச் சகலமுமைகைகூடுமெனக்கண்டுகொள்க. ௬௩

## குற்றங்கடிதல்.

சகுனியன்றான்மாறன்கெடவிடக்குற்றத்தால்
எய்யுந்திலேக்கையிரங்கேசா—வையத்
திணைத்துணையாங்குற்றம்வரினும்பனைத்துணையாகக்
கொள்வர்பழிநாணுவார்.

(என்பது)பழியையஞ்சுவோர் தினையளவுசிறிய குற்றமானது தம்மிடத்துவந்ததாயினும் அதனை யவ்வளவாகவல்லாமல் பனையினளவுபெரிதாகக்கொள்வார்களென்ன நாயனாற் குறளில்திருவாயமலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக பாண்டிதேசத்தில்ஒரக்ராரத்தில் ஒரேழைப்பிராமணன் கெங்காஸ்னானத்துக்குப்போகப்பிரயாணப்பட்டுத்தன்மனைவியோடுசொல்ல அவள்நீர்போனால் என்னையாதரிப்பவர்களாரெனஅதற்குப்பிராமணன் அரசனாதரிப்பானென்று சொல்லிவிட்டுப்போய்விட்டான், அதைநகரிசோதனைக்குவந்த பாண்டியனறிந்து வருத்தப்பட்டுஅவள்நிமித்தம்அந்தஅக்ராரத்திலுள்ளவர்களுக்கெல்லாம் நாளொன்றுக்குஇரண்டுவேளையன்னத்திற்குவேண்டிய சுயம்பாகமும் சுமங்கலிகளுக்கு வருஷத்துக்கிரண்டு வஸ்திரமுங்கொடுத்துவருவதுமன்றி அவ்வீட்டைத்தானேபாதுகாத்துக்கொண்டுவந்தான் அப்படிநடந்து வருநாளில் ஒருநாள் அரசனிரவில் நகரிசோதனைக்குப்போகும்போது அந்தக்காசிக்குப்போனபிராமணன்வீட்டில் புருஷசஞ்சாரமாகவிருந்தமையால்அதைசோதிக்கவேண்டியரசன்கதவைத்தட்டினான் அப்போதுகாசிக்குபோய்வந்தபிராமணன்கதவைதட்டினவனாரடாவென்று வருதலைக்கண்டு தட்டினதுகுற்றமென்றுவிரைவிலோடிஅவ்வரிசையிலுள்ள வீட்டுக்கதவுகளையெல்லாந் தட்டிவிட்டுஅரசன்மறைந்துபோனான் பின்புஅவ்வக்கிராரத்துப்பிரமணனெல்லாங்கதவைத்திறந்துபார்த்து ஒருவருமில்லாமையால் அரசனிடத்துவந்துபிராதுசெய்தான் அரசனல்லது விசாரிப்போமென்றுசொல்லியுங்கேளாமல் எங்கள்வீட்டுக் கதவைத்தட்டினவனுடையகையைஇப்பொழுதேவெட்டவேண்டும் இல்லையாயின் நாங்கள்ஸ்னானமுதல்செய்யமாட்டோமென்று பிராமணர்கள்சொல்லஅதைக்கேட்டரசன் அவர்கள்முன்பாகத்தன்கையைவெட்டிப்போடஅதைப்பிராமணர்கள்கண்டுபயந்து நடந்தசங்கதிகளை விவரமாகக்கேட்டுயாகஞ்செய்வித்து அரசனுக்குப் பொற்கைவளரும்படி செய்தார்கள்.—(ஆதலால் அறிவுடையோர்தம்மாட்டுவந்த குற்றம்பொருதுயிர்விடுவாரெனக் கண்டுகொள்க.

(௩௯)

## பெரியாரைத்துணைக்கோடல்.

யோகமுனிராகவனையுற்றாக்கர்மோர்களெங்கே
யாகமுடித்தானிரங்கேசா — ஆகையாற்
றக்காரினத்தனைத்தானொழுகவல்லாரைச்
செற்றார்செயக்கிடந்ததில்.

(என்பது)யோக்கியாகிய இளந்தினை யுடையவனாகித்தானுமறிந்து நடக்கவல்லவொருவனை பகைவர் செய்யக்கிடந்த ஒருதுன்பமும்இல்லை

யென நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். அதற்குதாரணமாகவிசுவாமித்திரர் அயோத்தியில்வந்து தசரதனைக்கண்டு இராமலட்சுமணரைத் துணையாகக்கொண்டுபோய் தன்யாகத்துக்குவிரோதிகளாயிருந்த தாடகை முதலிய அசுரர்களையெல்லாங்கொன்று தன்யாகத்தை நிறைவேற்றிக்கொண்டு அகலிகைசாபமுந்தீர்ப்பித்து மிதிலைக்குப்போய் சாம்பசிவனதுவில்லை ஸ்ரீராமனால்வளைக்கச்செய்து சீதாதேவியை ஸ்ரீராமனுக்குக் கலியாணஞ்செய்வித்தார்.—(ஆதலால்பெரியோர்களைத் துணையாகக் கொள்வாராகில் அரியகாரியங்களையும்முடித்துக்கொள்ளலாமெனக்கண்டுகொள்க.)(௨௫)

## சிற்றினஞ்சேராமை.

துன்னுசகுனி கன்னன்சொற்கேட்டரவுயர்த்தோன்
என்னபயன்பெற்றானிரங்கேசா — மன்னிய
சிற்றினமஞ்சும்பெருமைசிறுமைதான்
சுற்றமாச்சூழ்ந்துவிடும்.

(என்பது)பெரியோரியல்பு சிறியவினத்தை அஞ்சுதல்செய்யும்மற்றைச்சிறியோரியல்பு அதுசேர்ந்தபொழுதே தனக்குறவாக எண்ணித்துணியுமெனநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். ஆதலால்அதற்குதாரணமாக துரியோதனன்-வீஷ்மாச்சாரி-துரோணாச்சாரி-கிருபாச்சாரி-அசுவத்தாமன்-விதுரன்முதலிய பெரியோர்சொல்லைக்கேளாமல்சகுனி-கர்ணன்-துற்சாதனன்முதலிய சிறியோர்சொல்லைக் கேட்டு தகாதகாரியங்களைச் செய்து தன்கிளையோடுமடிந்துபோனான்.—(ஆதலால் சிறியவரைக் கைவிடவேண்டுமெனக்கண்டுகொள்க.) (௨௬)

## தெரிந்துசெயல்வகை.

வீடணன்வன்மம்விளம்பவிலங்கைநகர்
ஈடழிந்ததன்றோவிரங்கேசா — கூடித்
தெரிந்தவினைத்தொடுதேர்ந்தெண்ணிச்செய்வார்க்
கரும்பொருள்யாதொன்றுமில்

(என்பது)தம்மாலேதெரிந்துகொள்ளப்பட்ட இனத்துடனே செய்யத்தகுந்தொழிலை யாராய்ந்து பின்னைதாமேயெண்ணிச்செய்துமுடிக்கவல்லஅரசருக்கு பெறுதற்கரியபொருள் யாதொன்றுமில்லையென நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகஇராமநாயகர் தன்னிடத்து அபயமாகவந்தடுத்தவிபீஷணனை தன்சத்துருவுக்குச்சகோதரனென்றுநினைத்து கைவிடாமல் அவன்பரிசுத்தனென்றுதெரிந்து அவ

னால் அவ்வரக்கரது உளவெலாமறிந்து இராவணன்முதலிய இராக்கதர்களையெல்லாம் மடித்து செயங்கொண்டார் (ஆகலால்உளவறிந்த ஒருவனைக் சேர்ந்தவனோடாலோசித்து யாதொருகாரியத்தையுஞ் செய்யவேண்டுமெனக்கண்டுகொள்க.) (௪௭)

## வலியறிதல்.

தைதலெனக்கருதிப்பார்க்கவராமன் சிலையோ
டெய்துதவந்தோற்றானிரங்கேசா — வையத்
துடைத்தம்வலியறியாரூக்கத்தினூக்கி
இடைக்கண்முறிந்தார்பலர்.

(என்பது.) தலைவனுதலையுடையதமது வலிமையினளவைத் தெரிந்துகொள்ளாதவராகி மனவெழுச்சியால் தம்மின் வலியவரோடு போர்செய்யத்தொடங்கி யவர்வருத்தலால் அதுசெய்துமுடிக்கப்பெறாமல்நடுவிலே கெட்டுப்போனவர் பலராமென நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக, இரகுநாயகரது பலத்தையறியாமல் சிறுபிள்ளையென்றெண்ணி யவரோடு பரசிராமர்வந்தெதிர்த்து தன்கைவில்லையுங்கொடுத்து அவர்பூட்டின அம்புக்கு இலக்காகத்தான்பண்ணிய தவத்தையுங்கொடுத்துப் பலவீனமடைந்தார். (ஆகலால் தனக்குச்சமமான பேரிடத்தல்லது அதிகபலமானவர்களுடனேயெதிர்க்கலாகாதெனக்கண்டுகொள்க.)

## காலமறிதல்.

ஆண்டுபதின்மூன்றாவுயர்த்தோன்செய்தவெல்லாம்
ஈண்டுபொறுத்தாண்டானிரங்கேசா — வேண்டிய
காலங்கருதியிருப்பர்கலங்காது
ஞாலங்கருதுபவர்.

(என்பது) பூமியெல்லாம்தப்பாமல் கொள்ளநினைக்குமரசர்தம்வலி மிகுதியாயினும் அதனைநினையாமல் அதற்கேற்றகாலத்தையேநினைத்துஅது வருமளவும் பகைமேற்செல்லாரென நாயனார்குறளில்திருவாய் மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக தருமபுத்திரர்பதின்மூன்றுவருஷம் துரியோதனன்பண்ணின கொடுமைகள் அநேகமாக விருந்தும் தமக்கான காலம்வருமளவும் பொறுத்திருந்து பின்பு அவனோடெதிர்த்துயுத்தஞ்செய்து அவன்புத்திரமித்திர களத்திராதிகளையுங் கொன்று செயம்பெற்று அஸ்திநாபுரத்தையாண்டார். — (ஆகலால்யாதொருகாரியத்தையுங் காலமறிந்து செய்யவேண்டுமெனக்கண்டுகொள்க.) (௪௯)

தேறான்றெளிவுந் தெளிந்தான்கணையுறவும்
தீராவிடும்பை தரும்.

(என்பது) அரசன்ஒருவனை யாராய்ந்திலனாகித் தெளிதலும்ஆராய்ந்துதெளியப்பட்டவனிடத்தே சந்தேகப்படுதலும் அவனுக்குத்தீராததுன்பத்தைக்கொடுக்குமென நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக துரியோதனன் துரோணாச்சாரியார் குமாரராகிய அசுவத்தாமன் வில்வித்தையிற்சாமர்த்தியனென்று சிரஞ்சீவியென்றுமறிந்தும் அவனிடத்துச் சந்தேகப்பட்டு இன்னகுலமென்றும் இன்னவித்தையிற்சாமர்த்தியனென்று மறியாதகர்ணனைநம்பி பாரதயுத்தத்தில்துரோணாச்சாரியருக்குப் பின்பு அவனுக்குச் சேனாதிபத்தியங்கொடுத்து மிகுந்ததுக்கத்தையனுபவித்தான். (ஆகலால யாதொருகாரியமும் ஆராய்ந்து செய்யவேண்டுமெனக் கண்டுகொள்க.)

## தெரிந்துவினையாடல்.

சல்லியனைத்தேருக்குச் சாரதியாய்க்கொண்டதனால்
எல்லவன்சேய்தோற்றா னிரங்கேசா—சொல்லில்
இதனையிதனா லிவன்முடிக்குமென்றாய்ந்
ததனையவன்கண் விடல்.

(என்பது) இத்தொழிலை இச்சாதனத்தால் இவன்முடிக்கவல்லவனென்று ஆராய்ந்துகூறுபடுத்தி இம்மூன்றுந்தம்மு ளொத்திருக்கவிடத்து அத்தொழிலைஅவனிடத்து விடக்கடவனென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார். (ஆகலால் அதற்குதாரணமாக பாரதப்போரில் அருச்சுனன் தேருக்குக்கிருஷ்ணன் சாரத்தியம்பண்ணுகிறானென்றறிந்து சல்லியராசனைக் கிருஷ்ணனுக்குச்சமானமாகக் கர்ணன்றேருக்குச் சாரத்தியமாகவைத்ததால் அவன்கிருஷ்ணனுக்குச் சமானமாகச் சாரத்தியம்பண்ணவறியாமல் கர்ணன்மடிந்துபோனான் (ஆகலால்யாதொருகாரியமும் தேறவிசாரித்துச் செய்யவேண்டுமெனக் கண்டுகொள்க.)

## சுற்றந்தழால்.

வில்லுக்கதிபன் விரகிறனைவாராக்
கில்லுற்றுமியந்தா னிரங்கேசா—நல்ல
விருப்பறாச்சுற்ற மியையினருப்பறா
ஆக்கம்பலவுந் தரும்.

(என்பது) அன்புநீங்காதசுற்றமானது ஒருவனுக்குக்கிடைக்குமாயின் அதுகிளைத்தல் நீங்காதபல செல்வங்களையும் அவனுக்குக் கொடுக்குமென்று நாயனார் குறளில்திருவாய் மலர்ந்தருளினார் அதற்குதாரணமாக

திருதராட்டிரன் தன்பிள்ளைகளும் பாண்டவர்களும் பகைத்திருக்கிறார்களென்றறிந்து தருமராசனையழைத்து நீங்களைவரும் வாரணாவதநகரிற்போயொருவருஷகாலம் உங்கள்பிதாவுக்குத் திலோதகப்பணமுதலிய கர்மங்களைச்செய்துகொண்டிருந்து பின்புவாருங்களென்றனுப்ப அவர்களங்குபோயிருந்தகாலத்தில் துரியோதனனொரு சிற்பியை யழைத்து வாரணாவதத்தில் பாண்டவர்கள்சாகும்படி ஓரரக்குமாளிகை கட்டுவிக்க அதனை விதுரனறிந்து அந்தசிற்பிக்குவேண்டிய வெகுமதிகளைக்கொடுத்து அந்தவரக்குமாளிகைக்குள் பாண்டவர்கள்தப்பித்துக்கொண்டு வெளியேபோகும்படி ஓர் வழிபண்ணுவித்து அதுகாரியத்தைவீமனுக்குத் தெரிவித்திருந்தான்பின்பு துரியோதனன் புரோசனனென்னுமந்திரியை யவ்விடத்திற்கனுப்பி அரக்குமாளிகையில் தீவைக்கும்படியனுப்ப அதுவீமன்தெரிந்து அச்சமயத்தில்தமையன்தம்பிமார்நால்வரையும் தாயாரையும் எடுத்துக்கொண்டு அச்சுரங்கத்தின்வழியாகப்புறப்பட்டு இடும்பன்வனத்தில்வந்து பிழைத்தார்கள். (ஆதலால் சுற்றத்தாரிடத் தன்புவைக்கவேண்டுமெனக் கண்டுகொள்க.)

## பொச்சாவாமை.

தண்ணார்சடைமுடியைத் தக்கனிழந்தானரனை
எண்ணாமலன்றோ விரங்கேசா — மண்மேனோர்
இகழ்ச்சியிற்கெட்டாரை யுள்ளுகதாந்தம்
மகிழ்ச்சியின்மைந்துறும் போழ்து.

(என்பது) ஒருவர்தமது மகிழ்ச்சியினிடத்து தாஞ்செருக்குறும் போழ்து முற்காலத்திலே அதனாலாகிய மறதியினாலே கெட்டவர்களை நினைக்கக்கடவரென வாயனார்குறளில் திருவாய் மலர்ந்தருளினார் அதற்குகாரணமாக தக்ஷப்பிரசாபதியென்பவன் ஐசுவரியத்தினாலே அகங்காரத்தை யடைந்து தான்செய்யும்யாகத்திலே பரமசிவனுக்கு அவிர்ப்பாகங்கொடாதொழிந்து அவனைநீக்கிவைத்து மற்றதேவர்களை யெல்லாஞ் சேர்த்துக்கொண்டு யாகம்பண்ணியகாலத்தில் பரமசிவனுக்குக்கோபம்வந்து தனதுநெற்றியிலுண்டான வியர்வையில் வீரபத்திரனைப் பிறப்பித்து யாகமுகத்திலனுப்ப அவனவ்விடத்திற்குப்போய் யாகத்தையுமழித்து தக்கன்றலையுமறு தேவர்களையும்பங்கப்படுத்தினான் (ஆதலால் மமதையில்லாமல் யாவையுமறி ௫௭
ந்து நடக்கவேண்டுமெனக் கண்டுகொள்க.)

## செங்கோன்மை.

கண்கொண்டான்பொன்னிக் கரைகட்டவாரானை
ஏன்கொண்டசோழ னிரங்கேசா — மண்கொண்ட

முனிந்து சிதன்கோபத்தினால் அந்தப்பட்டணத்தைநோக்கினகைத்தமாத்திரத்தில் அவர்கள்பட்டணங்களுடனே எரிந்துசாம்பலானார்கள் (ஆதலால் செங்கோன்முறைதப்பி நடந்தவர்கள் தாம்செய்ததருமமும் தங்களுக்குதவாமல்செல்வத்தையும் பிராணனையும்இழப்பார்களெனக்கண்டுகொள்க.()

## வெருவந்தசெய்யாமை.

தாடகைதன்மைந்தர்தவமுநியைச்சுறுத்தி
ஈடரக்காரானாரிரங்கேசா—நாடி
வெருவந்தசெய்தொழுகும் வெங்கோலனாயின்
ஒருவந்தமொல்லைக்கெடும்

(என்பது)அரசன்குடிகளால் அஞ்சப்பட்டசெயல்களைச்செய்தும் கொடுங்கோலனாயிருந்தால் நிச்சயமாகவே கடிதில்அவன்கெட்டுப் போவானென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினா ராதலால் அதற்குகாரணமாக சுகனென்றொரட்சன் வனத்தின்கண் அகத்தியாசிரமத்திலேவந்து அங்குள்ள பூமரங்களையெல்லாம் பிடுங்கி யழித்தமையால் முனிவனது கோபாக்கினியினாலே வெந்து சாம்பலானான் பின்பு அவனுடைய மனைவியாகிய தாடகையும் அவள்பிள்ளைகளாகிய சுவாகுமாரீசனென்பவரும்பொறாமையில்வந்து முனிவனைப்பயமுறுத்தியதால்முனிவனுக்குக்கோபமுண்டாகி நீவிர் இராக்கதராகக்கடவீர்களென்று சாபமிடஅதனால்அவனிராச்சியமுங்கெட்டுஎட்சத்தன்மையுங்கெட்டுப் பாதாளத்திற்புகுந்துமாலியவானுக்குப்பிள்ளைபுகுந்தார்.—(ஆதலால்ஒருவருக்குப் பயமுண்டாக்கினவன் விரைவிற்கெடுவானெனக்கண்டுகொள்க.) (௫௭)

## கண்ணோட்டம்.

சொல்லுமவென்றங்கதனைத்தூதேவிமாதையிட
இல்லையெனவென்றானிரங்கேசா—மெல்ல
ஒருத்தாற்றும்பண்பினார் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும்பண்ணிபேதலை.

(என்பது.) தம்மையொறுக்கு மியல்புடையவரிடத்துங் கண்ணோட்டமுடையவராகி அக்குற்றத்தைப்பொறுக்குமியல்பே அரசர்க்குத்தலைமையான வியல்பென்று நாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குகாரணமாக இரகுநாயகர் இராவணன்செய்தஅபசாரத்தினாலே சுக்கிரீபனைப்படைத்துணையாகக்கொண்டுசேதுபந்தனம்பண்ணிஇலங்கையிற்போய் இராவணனுக்குப்புத்திசொல்லஅங்கதனையனுப்பஅவன்கேளா

முறிந்து சிதன்கோபத்தினால் அந்தப்பட்டணத்தைநோக்கிநகைத்தமாத்தி ரத்தில் அவர்கள்பட்டணங்களுடனே எரிந்துசாம்பலானார்கள் (ஆதலால் செங்கோன்முறைதப்பி நடந்தவர்கள் தாம்செய்ததருமமும் தங்களுக்குத வாமல்செல்வத்தையும் பிராணனையும்இழப்பார்களெனக்கண்டுகொள்க.()

## வெருவந்தசெய்யாமை.

தாடகைதன்மைந்தர்தவமுநியைச்சுறுத்தி
ஈடரக்காரனாரிரங்கேசா—நாடி
வெருவந்தசெய்தொழுகும் வெங்கோலனாயின்
ஒருவந்தமொல்லைக்கெடும்

(என்பது)அரசன்குடிகளால் அஞ்சப்பட்டசெயல்களைச்செய்தும் கொடுங்கோலனாயிருந்தால் நிச்சயமாகவே கடிதில்அவன்கெட்டுப் போவானென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினா ராதலால் அதற்குகாரணமாக சுகனென்றொரெட்சன் வனத்தின்கண் அகத்தியாசிரமத்திலேவந்து அங்குள்ள பூமரங்களையெல்லாம் பிடுங்கி யழிந்தமையால் முனிவனது கோபாக்கினியினாலே வெந்து சாம்பலானான் பின்பு அவனுடைய மனைவியாகிய தாடகையும் அவன்பிள்ளைகளாகிய சுவாகுமாரீசன்என்பவரும்பொறியில்வந்து முனிவனைப்பயமுறுத்தியதால்முனிவனுக்குக்கோபமுண்டாகி நீவிர் இராக்கதராகக்கடவீர்களென்று சாபமிடஅதனால்அவனிராச்சியமுங்கெட்டுஎட்சத்தன்மையுங்கெட்டுப் பாதாளத்திற்புகுந்துமாலியவானுக்குப்பிள்ளைபுகுந்தார்.—(ஆதலால்ஒருவருக்குப் பயமுண்டாக்கினவன் விரைவிற்கெடுவானெனக்கண்டுகொள்க.) (௫௭)

## கண்ணோட்டம்.

சொல்லுமவென்றக்கதனைத்துமேதவிமாதையிட
இல்லையெனவென்றானிரங்கேசா—மெல்ல
ஒருத்தாற்றும்பண்பினார் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும்பண்பேதலை.

(என்பது.) தம்மையொருக்கு மியல்புடையவரிடத்துங் கண்ணோட்டமுடையவராகி அக்குற்றத்தைப்பொறுக்குமியல்பே அரசர்க்குத்தலைமையான வியல்பென்று நாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக இரகுநாயகர் இராவணன்செய்தஅபசாரத்தினாலே சுக்கிரீபனைப்படைத்துணையாகக்கொண்டுசேதுபந்தனம்பண்ணிஇலங்கையிற்போய் இராவணனுக்குப்புத்திசொல்லஅங்கதனையனுப்பஅவன்கேளா

மையால் போர்செய்தவனையழித்தார் (ஆகலால்ஒருவர்செய்தகுற்றத்தையும்பொறுத்துத் தெண்டிக்கவேண்டுமெனக்கண்டுகொள்க.) (௫௮)

## ஒற்றாடல்.

மேகநாதன்செய்தவேள்விதனைபெற்றிறல்
ஏகியழித்துய்ந்தாரிரங்கேசா—வேகரித்த
ஒற்றினாலெற்றிப்பொருடெரியமன்னவன்
கொற்றங்கொளக்கிடந்ததில்

(என்பது)ஒன்றனைக்கொண்டெல்லாரிடத்துநிகழ்ந்தவைகளை யறிந்துவரச்செய்து அவைகளாலடையும்பயனை ஆராய்ந்தறியாதஅரசனானவன்வெற்றியடையக்கிடந்தது வேறொருவழியில்லையென நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக இந்திரஜெயித்து நிகும்பலையாகம்பண்ணும்போது இரகுநாயகர்விபீஷணரையனுப்பி அவராற்றெரிந்துகொண்டு இலட்சுமணரைச்சேனைகளோடனுப்பி அவன்செய்யும் யாகத்தையுமழித்து அவனையுங்கொல்லுவித்தார்.—(ஆகலால் அரசர்கள் உலகத்தில் நடக்கிறகாரியங்களை ஒற்றரால் விசாரித்துத் தெரிந்துகொண்டு அதற்குத்தக்கதாக நடக்கவேண்டுமெனக்கண்டுகொள்க) (௫௯)

## ஊக்கமுடைமை.

வீசுபுகழ்விசயன்விற்றழும்புசென்னியின்மேல்
ஈசன்றரித்தானிரங்கேசா—ஆசையால்
ஆக்கமதர்வினாய்ச்செல்லுமசைவிலா
ஊக்கமுடையானுழை.

(என்பது)அசைவில்லாத மனவெழுச்சி யுடையவனிடத்தே பொருளானது வழிகேட்டுக்கொண்டு போகுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக அருச்சுனன்பாசுபதாஸ்திரம்வேண்டி அரிதாகியதவசுபண்ணும்போது பரமசிவன் அவன்றபசைச் சோதிக்கவேண்டித் தான்வேடனாகவுருவங்கொண்டுவந்து அருச்சுனனைக் கொல்லவந்திருக்கும் இராக்கதனாகியபன்றியைத்துரத்த அப்பன்றிஅருச்சுனன்வறித் தபசுபண்ணும் கம்பத்தினடியில்வந்து அபயமென்றுகூக்குரலிட அதுகண்டு அருச்சுனன்பன்றிக்குஅபயங்கொடுக்க சிவனாகியவேடன்வந்து நான்றுரத்தியபன்றியைவிடச்சொல்ல,அருச்சுனன் என்னிடத் தஞ்சமாகவந்ததை விடேனென்றுசொல்ல அப்பொழுதிருவருக்கும் போர்விளைந்து அருச்சுனனுடைய வில்நாணியைச் சிவனறுக்க வில்மீண்டது அதைக்கண்டு அருச்சுனன்கோபித்து நீண்டவில்லைத் தெண்டாயுதமாகக்

கொண்டு சங்கரன்றலையில்அடிக்கப்பரமசிவன் சந்தோஷித்துப் பாசுபதாஸ்திரமும்வேண்டியவரங்களையுங்கொடுத்தார்.—(ஆதலால்தயிரியம்விடாதவர்களுக்குச்சகலநன்மையுமுண்டாகுமெனக்கண்டுகொள்க.) (௬௰)

## மடியின்மை.

துஞ்சுவிழிக்கும்பகன்னன் றுண்டஞ்செவியிழந்தும்
எஞ்சுதலையுற்றானிரங்கேசா—விஞ்சும்
மடிமைகுடிமைக்கட்டங்கிற்றன்னொன்னார்க்
கடிமைபுகுத்திவிடும்

(என்பது)சோம்பற்றன்மையானது குடிமையுடைய அரசனிடத்தேதங்குமாயின் அது தன்பகைவர்க்குஅடியனாந்தன்மையைஅவனையடைவித்துவிடும் என்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார்ஆதலால்அதற்குதாரணமாக கும்பகர்னன் போர்க்களத்தில்வந்து சகலவனசரரையுங்கொன்றுசுக்கிரீவனையும் பிடித்துக்கொண்டு போகும்போது சோம்பலாகியமித்திரைவந்து தோன்றினதால்சுக்கிரீபனுக்கிளைத்துத் தன்மூக்குங்காதுமிழந்தான்.—(ஆதலால்சோம்பலைவிடவேண்டுமெனக்கண்டுகொள்க.)௬௧

## ஆள்வினையுடைமை.

செய்துசிவபூசைசிரஞ்சீவியாமபயம்
எய்தினன்மார்க்கண்டனிரங்கேசா—நொய்தாக
ஊழையுமுப்பக்கங்காண் பருலைவின்றித்
தாழாதுஞற்றுபவர்

(என்பது)பயனைவிலக்குவதாகிய ஊழையும்புறங்காண்பார் அவ்விலக்குதற்குஇளையாமல் தாழ்வறத்தொழிலையுமுயல்வோர்என்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகமிருகண்டமாமுனிவன் ஈச்சுவரனைநோக்கித் தவஞ்செய்துபதினாறுவயதிருக்கும்படியான ஒருபிள்ளையைப்பெற்று வளர்த்து மார்க்கண்டனென்றுபெயருமிட்டு சகலகலைக்கியானங்களும் பதினைந்துவயதுக்குள் கற்பித்துப்பண்டிதனாகவிருக்குங்காலத்தில் மாதாபிதாக்கள்பிள்ளையைப்பார்த்துத்துக்கிததபோது அந்தப்பிள்ளைதாயுந்தந்தையும் வியசனமுற்ற காரியத்தை விவரமாகத்தெரிந்து அச்சப்படாமல்ஒருவருஷம் பரமசிவனை யிடைவிடாமல்பூசித்துப் பதினாறும்வயதின்முடிவில் இயமன்வர அவனைப்பரமசிவனால் உதைப்பித்து ஊழையுந்தள்ளிஎன்றும்பதினாறுவயதுபெற்றுச் சிரஞ்சீவியாயினன்.—(ஆதலால்ஒருகாரியத்தைத்தொடங்கி நடத்தும்போது என்ன இடை

யூறுவந்தாலும் சோம்புதலின்றித்தள்ளி நடத்துமவனுக்குநினைத்தகாரியங்கைகூடுமெனக் கண்டுகொள்க.) (௬௨)

## இடுக்கணழியாமை.

விற்றமனையாளை வெட்டுதலுமுற்ற துயர்
இற்றதுமன்னர்க்கிரங்கேசா—அற்றலகில்
இன்னாமையின்பமெனக்கொளினாகுந்தன்
ஒன்னார்விழையுஞ்சிறப்பு

(என்பது)ஒருவன்தொழில்செய்யுமிடத்து முயற்சியால்வருந்துன்பத்தையே தனக்கு இன்பமாகநினைத்துக்கொள்ளுவானாயின் அதனால் தன் பகைவர் நன்குமதித்தற்கு ஏதுவாகிய உயர்ச்சியானது உண்டாகுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக அரிச்சந்திரமகாராசன் சத்தியந்தப்பாமல் விசுவாமித்திரனுக்குத் தாரைவார்த்துககொடுத்த பொன்னுக்காகத்தன்மனைவியையும்குமாரனையும்பார்ப்பானிடத்து விற்றுக்கொடுத்துந்தீராமல் தானும் பறையனுக்கடிமையாகியும் முனிவன்சந்தோஷியாமல்மகனையும் விஷத்தினாலேகொல்லுவித்து அதைத்தகனம்பண்ணவந்த மனைவியை காசிராசாவின்பிள்ளைக்கொன்றகுற்றவாளியாக்கி அவளைக்கொலைசெய்யும்படி தன்கையிற்கொடுத்தபோதும்தளராமல்வெட்டும்போது அரசன் சத்தியத்தைக்குறித்துமெச்சிசகலதேவர்களும் பிரத்தியட்சமாய்வந்து அவர்களடிமையுந்தீர்த்து வேண்டியவரங்களுங்கொடுத்துவிசுவாமித்திரன்செய்ததவத்திலும்பாதிகொடுப்பித்துமுன்போலராச்சியமும் ஆளும்படிசெய்வித்தார்.—(ஆதலால் துக்கம் வந்தவிடத்திலும்மனந்தளராமல் இன்பமெனக்கொளவேண்டுமெனக்கண்டுகொள்க.)

முதலாவது-அரசியல்-முற்றும்.

# இரண்டாவது-அமைச்சியல்.

## அமைச்சு

மாணவன்மால்தேவரோவானராமாதைவிடாய்
ஈனமுறுமென்றானிரங்கேசா
அறிகொண்டறியானெனினுமுறுதி
உழையிருந்தான்கூறல்கடன்

(என்பது) அறிந்து சொல்வினைவ ரது அறிவையுமழித்தது தானு ம்அறியானே யாயினுப் அக்குற்றநோக்கிக் கைவிடாமல் அரசனுக்குவுறு தியானவைகளைச்சொல்லுதல் மந்திரியினதுமுறைமையாகுமென்று நாய ஞர்குறளில் திருவாய்மலர்ந்தருளினூர்- அதற்குதாரணமாக இராவணன் மந்திராலோசனைபண்ணிமிடத்து விபீஷணன் இராவணனைப்பார்த்து ஸ்ரீ மந்நாராயணமூர்த்தியே இராகவனாக வவதாரம் பண்ணினுன் நந்திகேஸ் வரர்சாபத்தினால் தேவர்களெல்லாம் வநசாராகவந்திருக்கிறுர்கள்அன்றியு ம்மனிதர்களை ஜயிக்கும்படியானவரமும் நாம்பெறவில்லை ஆதலால் இ வர்களை நாமொருபோதும் ஜயிக்கமாட்டோம் சீதாதேவியைவிட்டுவிடு இல் லையேல் நமக்குப்பிராணஹானி வருமென்று உறுதியாகச் சொன்னான்.— (ஆதலால அரசனுக்குவருங்காரியம மந்திரிசொல்ல வேண்டு மெனக்கண் டுகொள்க.) (௬௪)

## சொல்வன்மை.

சோழன்சிவரற்பாங்சொல் தோற்றமைதானிந்தவுல
கேழுமறிந்ததிரங்கேசா—நாழாமல்
சொல்லுகசொல்லைப் பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மை யறிந்து-

(என்பது) தானுஞ்சொல்லக்கருதியசொல்லை வெல்லவல்ல சொல்லா கிய பிறிதோர்சொல் இல்லாமையைத்தெரிந்து அந்தச்சொல்லைச்சொல்லக் கடவதென்று நாயனுர்குறளில் திருவாய் மலர்ந்தருளினூராதலால் அதற்கு தாரணமாக கிருமிகண்டசோழன் விட்டுணுத்தலங்களை யழித்து சிவாற்ப ரஞஸ்த்தியென்று கையொப்பமஇட்விதுக்கொண்டு வருநாளில் ஸ்ரீரங்க த்தில் கூரத்தாழ்வாரைக்கண்டுகையொப்பமிடச்சொன்னபோது அவர்து ரோணமஸ்த்தி தற்பரமென்றெழுதினார் அப்போதுஅரசன் கோபங்கொ ண்டு அதுவென்னவென்றுகேட்க சிவமானது குறுணியென்றும் துருணி யுண்டாகியபோதே துரோணமபதக்குண்டென்றார் அதைக்கேட்டுஅரசன் ஆழ்வாரைக்கண்ணைப்பிடுங்கினித்தான் அப்போதுபிடுங்கினகண் உடனே வளரப்பிகொடுத்தார் அதைக்கண்டுராசாவானவ ரதிசயபபட்டு விஷ்ணுத்த லங்களைப் பிடுங்காமல்விட்டார்—(ஆதலால் சபையில் தோல்வியடையாத வார்த்தைகளைச் சொல்லவேண்டுமெனக் கண்டுகொள்க. (௬௫)

## வினைத்தூய்மை

தன்மவினைற்றோற்றுள் தானிறமூதுங்ககைக
இன்மைகற்றுசல்வெவ் றிரங்கேசா—நன்மை
கழுநதகாடிநீதார செய்தார்க்கவைதாம்
முடிநதாலும்பீழை தரும்.

யூறுவந்தாலும் சோம்புதலின்றித்தன்னி நடத்துமவனுக்குநினைத்தகாரிய
மைகூடுமெனக் கண்டுகொள்க.) (௯௨)

## இடுக்கணழியாமை.

விற்றமனையாளை வெட்டுதலுமுற்ற துயர்
இற்றதுமன்னர்க்கிரங்கேசா—அற்றலகில்
இன்னாமையின்பமெனக்கொளினாகுந்தன்
ஒன்னாரவிழையுஞ்சிறப்பு

(என்பது)ஒருவன்தொழில்செய்யுமிடத்து முயற்சியால்வருந்துன்பத்தையே தனக்கு இன்பமாகநினைத்துக்கொள்ளுவானாயின்அதனால் தன்பகைவர் நன்குமதித்தற்கு ஏதுவாகிய உயர்ச்சியானது உண்டாகுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக அரிச்சந்திரமகாராசன் சத்தியந்தப்பாமல் விசுவாமித்திரனுக்குத் தாரைவார்த்துகொடுத்த பொன்னுக்காகத்தன்மனைவியையுங்குமாரனையும்பார்ப்பானிடத்து விற்றுக்கொடுத்துந்தீராமல் தானும் பறையனுக்கடிமையாகியும் முனிவன்சந்தோஷியாமல்மகனையும் விஷத்தினாலேகொல்லுவித்துஅதைத்தகனம்பண்ணவந்த மனைவியை காசிராசாவின்பிள்ளைக்கொன்றகுற்றவாளியாக்கி அவளைக்கொலைசெய்யும்படி தன்கையிற்கொடுத்தபோதுந்தளராமல்வெட்டும்போதுஅரசன் சத்தியத்தைக்குறித்துமெச்சிசகலதேவர்களும் பிரத்தியட்சமாய்வந்து அவர்களடிமையுந்தீர்த்து வேண்டியவரங்களுங்கொடுத்துவிசுவாமித்திரன்செய்ததவத்திலும்பாதிகொடுப்பித்துமுன்போலராச்சியமும் ஆளும்படிசெய்வித்தார்.—(ஆகலால் துக்கம் வந்தவிடத்திலும்மனந்தளராமல் இன்பமெனக்கொளவேண்டுமெனக்கண்டுகொள்க.)

முதலாவது-அரசியல்-முற்றும்.



# இரண்டாவது-அமைச்சியல்.



## அமைச்சு

மாணவன்மால்தேவரோவானராமாதைவிடாப்
ஈனமுறுமென்றுணிரங்கேசா
அறிகொண்டறியானெனினுமுறுதி
உழையிருந்தான்கூறல்கடன்

(என்பது) அறிந்து சொல்வினை யாது அறிவையுமழித்து தானும் அறியானே யாயினும் அக்குற்றநோக்கிக் கைவிடாமல் அரசனுக்குவுறுதியானவைகளைச்சொல்லுதல் மந்திரியினதுமுறைமையாகுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார்- அதற்குதாரணமாக இராவணன் மந்திராலோசனைபண்ணியிடத்து விபீஷணன் இராவணனைப்பார்த்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே இராகவனாக வவதாரம் பண்ணினான் நந்திகேஸ்வரர்சாபத்தினால் தேவர்களெல்லாம் வாநரராகவந்திருக்கிறார்கள் அன்றியும்மனிதர்களை ஜயிக்கும்படியானவரமும் நாம்பெற்றோமில்லை ஆதலால் இவர்களை நாமொருபோதும் ஜயிக்கமாட்டோம் சீதாதேவியைவிட்டுவிடு இல்லையேல் நமக்குப்பிராணஹானி வருமென்று உறுதியாகச் சொன்னான்.—(ஆதலால அரசனுக்குவருங்காரியம மந்திரிசொல்ல வேண்டு மெனக்கண்டுகொள்க.) (௯௪)

சொல்வன்மை.

சோழன்சிவரற்பாங்சொல் தோற்றமைதானிந்தவுல
கேழுமறிந்ததிரங்கேசா—தாழாமல்
சொல்லுகசொல்லைப் பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மை யறிந்து-

(என்பது) தாஞ்சொல்லக்கருதியசொல்லை வெல்லவல்ல சொல்லாகிய பிறிதோர்சொல் இல்லாமையைத்தெரிந்து அந்தச்சொல்லைச்சொல்லக்கடவதென்று நாயனார்குறளில் திருவாய் மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக கிருமிகண்டசோழன் விட்டுணுத்தலங்களை யழித்து சிவாற்பரநாஸ்தியென்று கையொப்பமிடுவித்துக்கொண்டு வருநாளில் ஸ்ரீரங்கத்தில் கூரத்தாழ்வாரைக்கண்டுகையொப்பமிடச்சொன்னபோது அவர் துரோணமஸ்தி தத்பரமென்றெழுதினார் அப்போதுஅரசன் கோபங்கொண்டு அதுவென்னவென்றுகேழ்க்க சிவமானதுகுறுணியென்றும் துரோணியுண்டாகியபோதே துரோணம்பதக்கென்றார் அதைக்கேட்டுஅரசன் ஆழ்வாரைக்கண்ணைப்பிடுங்குவித்தான் அப்போதுபிடுங்கினகண் உடனே சுவாமிகொடுத்தார் அதைக்கண்டராசாவானவ ரதிசயபட்டு விஷ்ணுத்தலங்களைப் பிடுங்காமல்விட்டார்—(ஆதலால் சபையில் தோல்வியடையாத வார்த்தைகளைச் சொல்லவேண்டுமெனக் கண்டுகொள்க. (௯௫)

வினைத்தூய்மை

தன்மகனைற்றேற்றுள் தரணிமுழுதுங்கைக
இன்மகற்குநல்கெய் திரங்கேசா—நன்மை
கடிந்தகடிந்தோரார் செய்தார்க்கவைதாம்
முடிந்தாலும்பீழை தரும்.

(என்பது) நூலோர்தள்ளிய தொழில்களைத் தாமுந் தள்ளிவிடா
ராகிப்பொருளைக்குறித்துச் செய்தவருக்கு அவைதாம்தூயவையல்லாமை
யால் முடியாவாம் ஒருவழியால்முடிந்தாலும் பின்றுன்பத்தைக்கொடுக்கு
மென்று நாயனார்குறளில திருவாய்மலர்ந்தருளினா ராதலால் அதற்குகார
ணமாக தசரதமகாராசன் இரகுநாயகருக்குப் பட்டாபிஷேகஞ்செய்யுஞ்ச
மயத்தில் கைகேசியானவள் தன்பிள்ளைபரதனுக்குஇராச்சியபட்டாபிஷே
கஞ்செய்யச்சொல்லி நியாயவிரோதமாகக்கேட்க அவருந்தான் கொடுத்தவ
ரம்பிசகாமற்கொடுத்துச் சுவர்க்கலோகமடைந்தார் தருமத்துக்கு விரோ
தமாகசசெய்தால் கைகேசிஅமங்கலியானாள்—(ஆதலால் தருமவிரோதஞ்
செய்தபேருக்கு உடனேகேடுவருமெனக் கண்டுகொள்க.)

## வினைத்திட்பம்.

ஆர்க்குங்கடனீ ரருந்தவொருகரத்தில்
ஏர்க்கவடக்கிற் றிரங்கேசா—பார்க்கும்
உருவுகண்டெள்ளாமை வேண்டுமுருள்பெருந்தேர்க்
கச்சாணியன்னா ருடைத்து.

(என்பது.) உலகமானது உருளாநின்றபெரியதேர்க்கு அச்சினிட
த்தே யாணிபோலத் தொழிலினிடத்தே வலியையுடையவரை உடையது
அதனால்அவர்வடிவினிடத்தே சிறுமைநோக்கிஅவமரியாதைவேண்டு
மென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் சுப்பிரமணிய
ர்அசுரசங்காரம்பண்ணுகிற காலத்தில் அசுராள்சமுத்திரத்திலேயொளித்
ததுகண்டு குறுமுனியாகிய அகஸ்தியர் சமுத்திரசலத்தையெல்லாம்உள்
ளங்கையிலடக்கி ஆசனவாகவுட்கொண்டார்—(ஆதலால் உருவுகண்டெள்
ளாமை வேண்டுமெனக் கண்டுகொள்க) (குஎ)

## வினைசெயல்வகை.

தொட்டதெரிப்போன் சுடர்முடிமேலங்கைவைப்பித்
திட்டவனைச்செற்ற யிரங்கேசா—முட்ட
வினையான்வினையாக்கிக் கோடனனைகவுள்
யானையால்யானையார்த் தற்று.

(என்பது) செய்யபபடுகின்ற தொழிலினாலே அப்படிப்பட்ட வே
றொருதொழிலை முடித்துக்கொள்ளக்கடவன் அதுமதத்தால்நனைந்தகபோ
லத்தையுடையயானையினால் அபபடிப்பட்ட வேறொருயானையைக் கட்டிய
தொடக்குமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அ
தற்குகாரணமாக பத்மாசூரன் தன்கையை யார்தலைமேல்வைத்தாலும் அ

வர்கள்வெந்து பஸ்பமாகப்போகவேண்டுமென்று ருத்திர னிடத்து வரம் பெற்றுக்கொண்டு அதைச்சோதிக்க வரங்கொடுத்த வுருத்திரன் றலைமீது தன்கையைவைக்கப்போக அவ்வுருத்திரன்ஓட அப்போதுவிஷ்ணுமோ கினிரூபமாகவெதிரேவர அவளைக்கண்டுமோகித்துப் புணரவர அம்மோ கினி ஸ்நானஞ்செய்து வாவெனசலமெங்குங்கிடையாமையால் ஒருமாட் டின் குளம்படியிலுள்ள நீரைத்தன்கையாற் றெடுத்தன்றலைமீதுவைக்க அவனெரிந்துபோனான்—(ஆதலால் அவரவராலேயாகுங் காரியங்களை அவரவராலேயேமுடித்துக்கொள்ள வேண்டுமெனக் கண்டுகொள்க.(சுஅ)

## தூது.

அக்கன்முதலாக்கராவிதனை வாங்கியூர்
எக்கியனுக்கீய்ந்தா னிரங்கேசா—மிக்க
இறுதிபயப்பினுமெஞ்சாதிறைவற்
குறுதிபயப்பதாந் தூது.

(என்பது) அரசன்சொல்லச்சொன்னவார்த்தை தனக்குமுடிவை த்தருமாயினும் அதற்குஞ்சிவிடாது தன்னரசன்சொன்னபடியே அவ்வர சனுக்கு மிகுதியைப்பயப்பது வேற்றரசரிடத்துச்சொல்லுவோனே தூத னுவானென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினார். அதற்குகாரண மாக அநுமார்தூதாகச்சென்று சமுத்திரமுந்தாண்டி சீதாதேவியையுங்க ண்டு அசோகவனத்தையுமழித்து அட்சயகுமாரன் முதலியமுந்நூறுவெ ள்ளஞ் சேனையையுங்கொன்று இலங்கைப் பட்டணத்தையும் அக்கினிக்கி ரையாகக்கொடுத்து எசமானன்காரியத்தையும் மேன்மைபண்ணிக்கொண் டுவந்தார்—(ஆதலால் எதிரிகோபிக்கப்பட்ட விடத்திலும்அச்சமின்றிஎச மானன்காரியத்தையும் முடிப்பவனே தூதனென்றுகண்டுகொள்க. (சுகூ)

## மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அட்சனிதியோர்க் குபசாரஞ்செய்ததினால்
எட்சன்பிரிந்தா னிரங்கேசா—பட்சம்
பழையமெனக்கருதிப் பண்பல்லசெய்யுங்
கெழுதகைமை கேடுதரும்.

(என்பது) அரசனுக்கு யாம்பழமையோமென நினைத்துதமக்கிய ல்பல்லாதவைகளைச் செய்கின்றவுரிமையானது மந்திரிகளுக்குக் கேட்டை த்தருமென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினா ராதலால் அதற் குகாரணமாக குபேரனுக்குநாள்தோறும் முடிப்பு மெடுத்துவருகிற ஓரெ

சூதன் தன்னுடையமனைவிபேரில் மோகமாயவொருநாள் இராசாவுக்குமுடிப்புகொடாமல் அவள்கையில்கொடுத்துவிட்டதை குபேரனறிந்து கோபமுற்றுஒருவருடம் அந்தப்பெண்ணை நீபிரிந்திருக்கக்கடவாயென்று சபித்ததால் அப்படியேஒருவருடம் பிரிந்துவிரகவேதனைப் பட்டான்.—(ஆதலால் அரசர்கள்மனதுக்குக்கோபம்வாராதபடி நடந்துக்கொள்ளவேண்டுமெனக்கண்டுகொள்க) (௭௰)

## குறிப்பறிதல்.

பார்வைகண்டிராமன் பவன்வில்லொடித்தனையக்கை
ஏர்வையாக்கொண்டா னிரங்கேசா—தீர்மையொடும்
ஐயப்படாஅ தகத்ததுணர்வானைத்
தெய்வத்தொ டொப்பக்கொளல்.

(என்பது) ஒருவன்மனதினிடத்திலே நிகழ்வதைசந்தேகப்படாமல் துணிவாகவறியவல்லவனை மனிதனேயாயினுந் தெய்வத்தோடு சமானமாக நன்குமதிக்கக்கடவன்என்று நாயனார் குறளில்திருவாய் மலர்ந்தருளினார் ஆதலால்அதற்குகாரணமாக இராமாயணத்தில் இராவணசம்மாரமானபின்பு விபீஷணனுக்குப்பட்டங்கட்டவேண்டி இரகுநாயகர்பாளையம்விட்டு இலங்கைப்பட்டணத்துட் பிரவேசித்து இராவணன் அரண்மனையைச்சுற்றிப்பார்க்கும்போது அவன்சபாமண்டபத்தில் ஒருசலவைக்கல்லிருந்தது அதைஸ்ரீராமர்கண்டு அதிசயித்துப்பார்த்து இச்சைகொண்டார் அந்தக்குறிப்பைச் சாம்புவந்தர்கண்டு இதுகத்தாபகாரமென்று சொன்னார்—(ஆதலால் மனதில்நினைத்தகுறிப்பையையும் புருஷனைத்தெய்வமாகக்கொள்ளவேண்டுமெனக் கண்டுகொள்க.) (௭௧)

## அவையறிதல்.

தேவர்முராக்கினிடைத் தென்பாலைத்தியனை
ஏவினிகன்ருனிரங்கேசா—பூவில்
அவையறிந்தாராய்ந்து சொல்லுகசொல்லின்
தொகையறிந்த தூய்மையவர்.

(என்பது) சொல்லின்கூட்டத்தைத்தெரிந்துபரிசுத்தகுணமுடையவர் தாமொன்றுசொல்லும்போது அப்பொழுதுள்ளசபையைத்தெரிந்து ஆராய்ச்சிசெய்துசொல்லக்கடவரென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குகாரணமாகபரமசிவன் இமோற் பர்வதத்திலேதிருக்கல்யாணத்துக்கெழுந்தருளியபோது சகலதேவர்முனிவர்கள்முதலியயாவரும்உத்தரபாரிசத்திற்கூடினதால் வடபூமிதாழ்ந்துதென்பூமியுயர்ந்தபடி

யால் சகலதேவர்களும்ஆலோசனை செய்யும்போது விசுவகர்மாசபையை ப்பார்த்து ஆலோசித்துஅகஸ்த்தியர்பொதியமலைக்குப் போயிருந்தால் பூமிசமனாகுமென்று பரமசிவனிடத்து விண்ணப்பம் பண்ணிக்கொள்ள அவ்வாறே இறைவன் அனுப்ப பூமிசமனாகின்றது.—(ஆதலால் யாவரும் யாதொன்றினையும்ஆலோசித்துச் சொல்லவேண்டுமெனக் கண்டுகொள்க.) (எஉ)

## அவையஞ்சாமை.

ஆன்றசங்கர்போற்றவொன்றையையிரண்டாமாநிலத்தார்க்
கின்றவரிற்சொன்னாரிரங்கேசா—தோன்றவே
கற்றாருட்கற்றாரெனப்படுவர்கற்றார்முற்
கற்றசெலச்சொல்லுவார்.

(என்பது.) கற்றோர்சபையினிடத்தே தாம் கற்றவைகளை அவர் மனங்கொள்ளும்வகை அஞ்சாமற்சொல்லவல்லவர் கற்றவல்லாரினும் இவர் நன்றாகக்கற்றவரென்று சொல்லப்படுவரென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக திருவள்ளுவநாயனார் திருக்குறளென்னும் பிரபந்தத்தை நூற்றுமுப்பத்துமூன்றதிகாரமாக்கி அதிகாரமொன்றுக்குப் பத்துப்பாடல்செய்து உலகத்திலுள்ளார்க் குபகாரமாகச்செய்து மதுரையில் கடைச்சங்கத்தாரிடத்திற்சென்று அவர்முன்பாக அரங்கேற்றி அவர்களைவென்று அவரால்துதிபெற்றார்.—(ஆதலால்புலவர்கள் நூல்செய்வார்களாயின் கற்றுவல்லோர் சபையிலரங்கேற்றி யாவரால் புகழப்படவேண்டுமெனக் கண்டுகொள்க) (எங)

இரண்டாவது-அமைச்சியல் முற்றும்.

## மூன்றாவது-அங்கவியல்.



### நாடு.

சீரிதாமெண்ணமுற்றதேசத்திற்றென்றிருக்கா
வேரிசூழ்சோணாடிரங்கேசா—ஆரப்
பெரும்பொருளாற்பெட்டக்கதாகியருங்கேட்டால்
ஆற்றவிளைவதுநாடு,

(என்பது.) நாடாவது அளவற்றபொருளுடைமையால் பிறதேசத்தாராலும் விரும்பத்தக்கதாகி அழிவில்லாமையோடுகூடி மிகவிளைவதேயாகுமென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினார். ஆதலால் அதற்குதாரணமாக சோழராசன் காவேரிகரைகண்டு தன்னாட்

டைப் புன்னாடாக்கி தேவலோகத்திலிருந்து நெல்விரைகொண்டுவந்து த
ன்தேசமுழுதும் விரைத்துப் பரிபாலனஞ்செய்வித்தான்.(ஆதலால்அர
சர்கள் தன்னாட்டை ஆறுகளினாலும் ஏரிகளினாலும்குளங்களினாலும் சி
றப்புறும்படி செய்விக்கவேண்டுமெனக்கண்டுகொள்க.) ()

## அரண்

சிந்துவிடைமூன்றுமதில்சேர்ந்தவிலங்கைநகர்
எந்தவகைபோயதிரங்கேசா—முந்தும்
வினைமாட்சித்தாகியக்கண்ணும்வினைமாட்சி
இல்லார்கணில்லாதரண்

(என்பது)கோட்டையானது முன்சொல்லப்பட்ட பெருமையெல்லாமுடைத்தாகியவிடத்தும் தொழில்செய்யுமிடத்துபெருமையை யில்லாதவரிடத்துஅவையில்லாம்என்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாகஇலங்காபுரிசமுத்திரமத்தியில் ஏழுசுத்துக்கோட்டையும் இரண்டாயிரம்வெள்ள ராட்சதசேனைகளும் - கும்பகர்ணன் கும்பன்-நிகும்பன்-மகோதரன்-மகாபாரிசன் - இந்திரசயித்துமுதலிய அனேகசுத்தவீரர்களிருந்தும் இராவணன்-விவேக சூனியனாதலால் சேதுபந்தனத்திற் கல்லுமிதக்கக்கண்டும்நிராயுதானகுரங்குகள் அரக்கரைக்கொல்லக்கண்டும் காரணந்தெரியாமல்புத்திரமித்திர களத்திராதியருடனேதானும்மடிந்து தலமுமிழந்தான்.—(ஆதலால்அறிவில்லாதவர்களிடத்து எவ்வித அரணிருப்பினும் நில்லாதெனக்கண்டுகொள்க.) (௭௫)

## பொருள்செயல்வகை

கட்டுவனும்பற்குணனார்நாடளக்கண்டுதிசை
எட்டும்பணிந்ததிரங்கேசா—கிட்டுபொருள்
இல்லாரையெல்லாருமெள்ளுவர்செல்வரை
எல்லாருஞ்செய்வர்சிறப்பு.

(என்பது)எல்லாநன்மையு முடையவராயிருந்தாலும் பொருளில்லாதவரை யாவரும்இகழ்வர் எல்லாத்திமையுமுடையவராயிருந்தாலும்அப்பொருளுடையவரை யாவரும் உயரச்செய்வாரென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் பாண்டவர்கள் அக்கியாதவாசம்பண்ணுங்காலத்தில் ஒருவருஷகாலம்விராடபுரத்தில்ஐவருந்தனித்தனி ஒவ்வொரு வேடங்கொண்டு விராடராசனுக்கு ஊழியக்காரராயிருந்தார்கள்,பின்பு துரியோதனனைசயித்து இராச்சியப்பட்டாபிஷேகஞ்செய்துக் கொண்டு அரசாளுநாளில் ஐம்பத்தாறுதேசத்தரசர்களும் வணங்கி யவருக்குப்பகுதிகட்

களும்வணங்கி யவருக்குப் பகுதிகட்டிக்கொண்டுவந்தார்கள்.—(ஆதலலா உலகத்தில்சகலபெலங்களிருந்தபோதிலும் அவைகாரணமல்ல செல்வமே பெருமைக்குக் காரணமெனக்கண்டுகொள்க.) ௭௬

## படையாட்சி.

மெய்கொள்கடல்போலுமூலபலமடிய
எய்துவென்றதோர்வில்லிரங்கேசா—வையம்
ஒலித்தக்காலென்னுமுவரியெலிப்பகை
நாகமுயிர்ப்பக்கெடும்

(என்பது.)எலிகளாகிய பகைதிரண்டு கடல்போலிரைந்தால் பாம்புக்கென்ன துன்பமுண்டாகும் அப்பாம்பு மூச்செறிந்தவளவிலேஅதுதானேகெடுமென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக இராமாயணத்தில் மூலபெலயுத்தத்தில்எழுநூறுவெள்ளஞ்சேனையும் மூன்னூறுவெள்ளம் இரதகசதுரகபதாதிகளையும் இரகுநாயகர் ஒருவில்லினாலே அர்த்தயாமத்தில் அதம்பண்ணிசெயங் கொண்டார். (ஆதலால்ஒருசுத்தவீரனுக்கு முன் யாவருநிகராகாரெனக்கண்டுகொள்க) ௭௭

## படைச்செருக்கு.

மார்பத்தழுந்துகணைவாங்கிவிடுத்தான்காங்கள்
ஈர்பத்தன்மைந்தனிரங்கேசா—ஆர்வத்தால்
கைவேல்களிற்றொடுபோக்கிவருபவன்
மெய்வேல்பறியாநகும்

(என்பது)தன்கைப்படையாகிய வேலை தன்மேல்வந்தயானையொடு எறிந்துவிட்டு வருகின்றயானைக்கு வேல்தேடித்திரிபவன் தன்மார்பிலிருந்த வேலைக்கண்டு பிடுங்கி மகிழ்வானென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக இந்திரசயித்துநிகும்பலையாகமழிந்தபின்பு லட்சுமணருடனே போர்செய்யும்போது லட்சுமணர்இந்திரஜயித்தினுடைய அம்புருத்தாணியை யறுத்தறுத்தள்ள இந்திரசயித்துத் தன்னிடத்துப் பாணமில்லாமைகண்டு லட்சுமணர் தன்மார்பிலெய்த பாணத்தைப்பிடுங்கி லட்சுமணர்மீதுஎய்தான்.—(ஆதலால் வீரனுக்குஎதிரியாயுதமுந்தனக்குதவுமெனக்கண்டுகொள்க.) (௭௮)

## நட்பு.

வாசவன்தட்சன்மகம்புகாவாறுய்த்தான்
ஈசனயன்போற்றிரங்கேசா—நேசம்

அழிவினவைநீக்கியாறுய்த்தழிவின்கண்
அல்லலுழப்பதா நட்பு

(என்பது) ஒருவனுக்கு நட்பாவது அழிவைத்தருகிற தீயவழியை விலக்கி நல்வழியிலேசெலுத்தி ஊழினாலே கேடுவந்த விடத்து அத்துன்பத்தை உடனிருந்தனுபவிப்பதேயென்று நாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினார். ஆகலால் அதற்குதாரணமாக ஜெனமேஜெயமகாராஜன்உதங்கமுனிவனைக்கொண்டு சர்ப்பயாகம்பண்ணினபோது உலகத்திலுள்ளபாம்புகளெல்லாம் யாகத்தில்விழுந்து மடியக்கண்டுதட்சகன்தனக்கு நேயனாகிய தேவேந்திரனையடைந்து அவன்சிங்காதனத்தைச்சுற்றிக்கொள்ள தேவேந்திரனுமதற்கிசைந்திருப்பதைக்கண்டு முனிவர்கள் இந்திராய தட்சகாய வென்று ஆகுதியெடுக்க அம்மந்திரம் தட்சகனை யிந்திரனோடிழுத்துவருவதை அகஸ்தியர்கண்டுஜெனமேஜெயன் யாகசாலைக்குவந்துஜெனமேஜெயனைச் சர்ப்பபிட்சைகேட்டு அவ்விருவரையும் விடுத்தார்.— (ஆதலால்சிநேகித்தவருக்குத் துன்பம்வருமாகிற்றானுங்கூட அனுபவிக்கவேண்டுமெனக்கண்டுகொள்க.) (எசு)

நட்புநட்பாராய்தல்.

தேசுபெருமார்த்தாண்டன் செல்வன்முடிகுடியிலங்
கேசனைவென்றுனிரங்கேசா—மாசில்
குடிப்பிறந்துதன்கட்பழி நாணுவானைக்
கொடுத்துங்கொளல்வேண்டுநட்பு

(என்பது) உயர்ந்த குடியிற்பிறந்து தன்னிடத்து உலகர் சொல்லும்பழிக்கு அஞ்சுவானை சிலகொடுத்தாயினும் சிநேகங்கொள்ளல்வேண்டுமென்று நாயனார்குறளில் திருவாய் மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக சுக்கிரீவன்இரகுநாயகனைச்சேர்ந்து தனக்குப்பகையாகிய வாலியையுங்கொன்று கிஷ்கிந்தையையுங் கைக்கொண்டுபின்பு எழுபதுவெள்ளம்வானரசேனையுடனே இலங்கைக்குச்சென்று இராவண சம்மாரஞ்செய்து சீதையம்மனையுமீட்டு இரகுநாயகருடனேஅயோத்திக்குவந்து அவர்பட்டாபிஷேகமுந்தரிசித்து அவருடனேபதினாயிரவருஷமிருந்து பின்புபரமபதத்திற் கவருடனே யெழுந்தருளினான்.—(ஆதலால் நல்லகுலமும் அபிமானமுள்ளவருக்குதவிசெய்து நட்புகொள்ளவேண்டுமெனக்கண்டுகொள்க.)

பழைமை.

தானவர்வேந்தைச்சடாயுபொருதிறந்தான்
ஏனவுருவாயிரங்கேசா—மானிலத்தில்

எல்லைக்கணின்றார் துறவார்தொலைவிடத்தும்
தொல்லைக்கணின்றார் தொடர்பு.

(என்பது) நட்பின்வரம்பிலேநின்றவர் தம்மோடுபழமையில் வேறுபடாது நின்றவரதுநட்பை அவராலே தொலைவுவந்தவிடத்தும் விடாரென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக சூரியகுமாரனாகிய சடாயுவுக்கும் தசரதமகாராசாவுக்கும் நெடுங்காலசிநேகமாதலால் இரகுநாயகர் ஆரணியவாசத்தில்சீதைதனித்திருக்கக்கண்டு இராவணன் தூக்கிக்கொண்டு போகும்போது சீதை இராகவன் முதலியோரைக் கூவியழ அதைச்சடாயுகண்டு நம்மிட சிநேகராகியதசரதமகாராசன்மருமகள்சீதையை இராவணன்கொண்டுபோகிறானென்றுஅவனோடெதிர்த்துப் பிரசண்டயுத்தஞ் செய்திறந்தார்—(ஆதலால் பழமையாகிய நட்டை பெரியோர்கள் பிராணபரியந்தமறவாரெனக் கண்டுகொள்க. (அக)

## தீ நட்பு.

மாயமாரீசன்மடிந்தான்கவுசிகன்றான்
ஏயதவமுற்றானிரங்கேசா—ஆயதனால்
பேதைபெருங்கெழீஇநட்பினறிவுடையார்
ஏதின்மைகோடியுறும்.

(என்பது) அறிவில்லாதவனது மிகவுநெருங்கியநட்பைப் பார்க்கிலும் அறிவுடையவரது பகைமை கோடியங்குநல்லதென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக மூடனாகிய இராவணனோடேயைம்பதுலட்சம்வருஷம் உறவாகவிருந்த மாரீசன் சொன்னபுத்திகேளாமல் அவன்பேதமைபடியால் மானுருவுருவங் கொண்டுவந்து இரகுநாயகர்கையால் மடிந்துபோனான் கவுசிகமகாராசன் வசிஷ்டருடனே பகைத்துத்தபசுசெய்து விசுவாமித்திரனென்று பெயரும்பெற்று மகாசித்தியானான்—(ஆதலால் அறிவிலியுறவிலும் விவேகிபகைமேன்மையது ருமெனக்கண்டுகொள்க.) (அஉ)

## கூடா நட்பு.

சார்ந்துநிதிகூப்பந்தசத்துருகேற்கண்டமா
ஊர்ந்தனனன்றோவிரங்கேசா—சேர்ந்தார்போல்
சொல்வணக்கமொன்னார்கட்கொள்ளற்கவில்வணக்கம்
தீங்குகுறித்தமையான்.

(என்பது) வில்லினதுவணக்கம் ஏற்றவர்க்குத் தீமைசெய்தலைக்குறித்ததனால் பகைவரிடத்தேபிறக்கும் சொல்லினது வணக்கத்தையும்நமக்

குனைமைசெய்தலைக் குறித்ததென்று நினையாதிருக்கக்கடவனென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்துக்காகத் திருப்பாற்கடல்கடைந்தகாலத்தில் தேவர்களாலே அசுரர்கள்மடிந்தார்கள் அதுகண்டு அசுரர்மாதாவாகிய திதியென்பவள் தன்னுடையபத்தாவாகிய காசிபனைக்கண்டு தன்பிள்ளைகள் மடிந்ததற்குக்காரணமாக தேவர்களை செயிக்க ஒருபுத்திரனெனக்குத்தரவேண்டுமென காசிபரவளைச்சேர்ந்து அப்படியே வரங்கொடுத்து நீ ஆயிரம்வருஷம் அபசாரமில்லாமல் தபசுபண்ணென்றுகட்டளையிட்டார் அவ்வாறே திதியானவள் ஒருவனத்திலேபோய் தபசுசெய்துக்கொண்டு இருக்கும்போது இந்திரன்வந்து நமஸ்காரம்பண்ணிதாயாராகிய நீ தனியாயிருக்கலாமாவென்று கூடவிருந்துபணிவிடைசெய்து சமயம்பார்த்திருக்குநாளில் தொளாயிரத்தைம்பது வருஷத்துக்குமேலொருநாள் மயிர்ச்சொருகில் துனிமயிர் வெளிப்பட்டுத்தோன்றும் அபசாரத்தால் இந்திரன் அவள்கருப்பத்துட்புகுந்து பிண்டத்தைஏழுகண்டமாகக் கண்டுவந்தான்பின்பு அப்பிண்டம் ஏழுபிள்ளைகளாகப்பிறக்க அவர்களை இந்திரன் சத்தமருத்துகளாகத்தேவர்களுடனே சேர்த்துக்கொண்டான் — (ஆதலால்சத்துருக்கள் வணக்கத்தை உண்மையாக நம்பினவருக்குக் கேடுவருமென்று கண்டுகொள்க.) (அ௰)

பேதைமை.

மாதாபிதாவைமறியாமலேசிறையில்
ஏதாகவைத்தானிரங்கேசா — மேதினியில்
ஏதிலாராரத்தமர்பசிப்பர்பேதை
பெருஞ்செல்வமுற்றக்கடை.

(என்பது) மூடனானவன்பெரியசெல்வத்தைஊழாலடைந்தவிடத்து தன்னோடுஒருசம்பந்தமுமில்லாதவர் அனுபவிக்கவெல்லாச்சம்பந்தமுமுடையதம்மவர் பசித்திருப்பர்என்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகஉக்கிரசேனனுக்குக்கஞ்சன்பிறந்தபோது மாதாபிதாவைப்பிடிப்பானென்று சோதிஷராற்கேட்டு அப்பிள்ளையை சிசுஹத்திக்குப்பயந்து பெட்டியில்வைத்துமூடி ஆற்றிலேவிட்டார்களதுதப்பெட்டி ஆனையரசனிடத்திற்போய்ச்சேர்ந்து அவனால்வளர்க்கப்பட்டுப் பின்புசராசந்தன்பட்டணத்தில் வசுதேவரிடத்தில் தனுர்வேதமுதலியவுங் கற்றுச் சமர்த்தனாகிச்சிங்கவாகனனென்று சராசந்தன்மகளையும் விவாகஞ்செய்துகொண்டு அதன்பின்பு தன்பூருவோத்திரமெல்லாம் விசாரித்தறி

ந்து வடமதுரையில்வந்து பட்டாபிஷேகஞ் சூட்டிக்கொண்டு தன்மாதாபிதாவைச்சிறையில்வைத்து இராச்சியபாரம்பண்ணினான்—(ஆகலால் மூடருக்குச்செல்வம்வந்ததால் தன்தமருக்குங்கேடாகுமெனக்கண்டுகொள்க,()

## புல்லறிவாண்மை

தாதைசிலையொடிப்பத் தானமொழிந்தான்தீதாக
ஈதுடையார்செய்யா ரிரங்கேசா—ஓதில்
அறிவிலார்தாந்தம்மைப் பிழைக்கும்பிழை
செறுவார்க்குஞ் செய்தலரிது.

(என்பது) புல்லறிவுடையவர் தாமேதங்களைவருத்தும் வருத்தமானது வருத்துதற்குரிய பகைவர்க்குஞ் செயதலரிதாமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக ஸ்ரீகிருஷ்ணதேவர்அஸ்த்தினபுரத்துக்குத் தூதுபோனபோது விதுரனரண்மனையிலேபோசனத்துக்குத்தங்கினதால் துரியோதனன்கோபங்கொண்டு விதுரனைப்பார்த்து நீ கிருஷ்ணனுக்குவிருந்திடைமாவென்று தூஷித்ததால் விதுர மகாராசன் கோபங்கொண்டு சத்துருக்களாற்ஜயித்தற் கரிதானவில்லை இரண்டுதுண்டாகவெட்டினதுமன்றி போர்க்களத்தினு நான்வரேனென்றுசபதஞ்செல்லுயாத்திரைபோய் விட்டான்—(ஆதலால்அறிவில்லாதவர்கள்சத்துருக்களால் செய்யப்படாத துன்பத்தைத்தானே தேடிக்கொள்ளுவரெனக்கண்டுகொள்க) (௮௫)

## இகல்.

சொன்னநிறத்தன் சுதனேயரும்பகையாய்
இன்னுயிரைக்கொன்றா னிரங்கேசா—மன்னும்
இகல்காணானாக்கம் வருங்காலதனை
மிகல்காணுங்கேடு தரற்கு.

(என்பது) ஒருவன்தன்னிடத்து ஆக்கம்வரும்போதுகாரணமுண்டாயினும் மாறுபாட்டைநினையான்றனக்குக்கேடுசெய்துகொள்ளுமிடத்து காரணமில்லாதிருந்தும் அதனிடத்தேமிகுதலைநினைப்பனென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக இரணியன்அரசாளுங்காலத்தில் திரிலோகமுந் தனக்கேவல்செய்ய முத்தொழில்களையுந் தானேநடத்தித்தன்னையன்றித் தெய்வமில்லையென்றுசொல்ல வாழ்ந்தான் அவனுக்குக்கேடுவந்தகாலத்தில் தன்பிள்ளையே ஒப்பில்லாத சத்துருவாகி அவன்காரணமாக இரணியனிறந்தான்—(ஆதலால் கேடுவருங்காலத்தில் வலியவன்பகையுண்டாகுமெனக் கண்டுகொள்க.) (௮௬)

## பகைமாட்சி.

சித்திரசேனன்கையிற் சிக்கினான்மன்னவர்மன்
இந்தரணிபோற்று மிரங்கேசா—சுத்த

வழிநோக்கான்வாய்ப்பன செய்யான்பழிநோக்கான்
பண்பிலன்பற்றார்க் கினிது.

(என்பது) ஒருவன் நீதிநூலைக்கல்லாதவனும் அது விதித்த தொழில்களைச்செய்யாதவனும் தனக்குவரும்பழியைப் பாராதவனும்குணமுடைய நல்லாதவனும்ஆகஇருப்பவன் பகைவற்குஇன்பமாவனென்று நாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக துரியோதனன்பாண்டவர்களைச் சூதால்வென்று துரௌபதியைஅம்பலத்திற்கொண்டுவந்து துயிலையுரிந்துமானபங்கஞ்செய்வித்து அவர்களை ஆரண்ணியவாசஞ்செய்யும்படிசெய்து பின்புகபடமாகத் தேவேந்திரனுடைய நிரையை யடக்கினால் அருச்சுனனொருவனும்யுத்தத்துக்குவருவான் அவனைச்சதிசெய்வோமென்று நினைத்துமடக்கினபோது அருச்சுனனமக்கென்னென்றிருக்க தேவலோகத்திலிருந்துசித்திரசேனன்வந்து யுத்தம்பண்ணிசகலசேனைகளையு முதுகுகொடுக்கச்செய்து துரியோதனனைக்கட்டிக்கொண்டுபோகும்போது அருச்சுனன்போய் அவனைமீட்டுக்கொண்டுவந்தான்—(ஆதலால்வஞ்சனையால் தகாதகாரியஞ்செய்தவர் அபசெயப் படுவார்களெனக் கண்டுகொள்க.) (௮௭)

## பகைத்திறந்தெரிதல்.

தெவ்வையிளந்தையென்று செப்பியேவிக்கிரமன்
எவ்வமிகவுற்றா னிரங்கேசா—வவ்வி
இளைதாகமுண்மரங் கொல்ககளையுநர
கைகொல்லுங்காழ்த்த விடத்து.

(என்பது) களையவேண்டுவதாகிய முள்ளுமரத்தை இளையதாகிய நிலையிலேகளையக்கடவர் அல்லாமல்முதிர்ந்தநிலையிலே களையத்தொடங்கினால் களைபவரது கையைஅதுதானே களையும்என்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக விக்கிரமார்க்கன்சாலிவாகனன் சிசுவென்றுபொறுத்திருந்தபடியால் அவன் வளர்ந்து சதுரங்கபலமும்மண்ணினாலேபண்ணி உயிருண்டாக்கி இராசாவுடனே யுத்தம்பண்ணிச்செயங்கொண்டான்—(ஆதலால் சத்துருக்கள்பலயீனமான சமயத்தில் செயம்பண்ணவேணுமென்று கண்டுகொள்க.) (௮௮)

## உட்பகை.

நாடாசுசெய்யாமல்ராமனைக்கான்போக்கினாள்
ஈடிலாக்கூனியிரங்கேசா—நீடுலகில்
எட்பகவன்னசிறுமைத்தேயாயினும்
உட்பகையுள்ளதாங்கேடு.

(என்பது) அவன்பெருமையைநோக்க எள்ளின் பிளவையொக்க சிறுமையுடையதேயாயினும் அப்பெருமையெல்லா மழியவரும்கேடுள்ளதாமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக இரகுநாயகர்சிறுபிள்ளையாக உண்டைவில்தெறித்து விளையாடுகிறகாலத்தில் மந்தரையாகியகூனியுடைய கூனிலேஉண்டைகொண்டுதெறித்துவிளையாடினார் அந்தவுட்பகையினாலேஇரகுநாயகருக்குப்பட்டாபிஷேகசமயத்தில்கூனியானவள் கைகேசிக்குச்சொல்லி விகாதம்பண்ணி வனத்திலேபோகப்பண்ணுவித்தாள்—(ஆதலால் சற்றேனும்உளவறிந்தபகையாகாதெனக் கண்டுகொள்க) (அசு)

## பெரியாரைப்பிழையாமை.

சொல்வல்லகத்தியற்குச் சூழ்ச்சிசெய்தவாதாவி
இல்வலனுமாய்ந்தா ரிரங்கேசா—மல்வல்ல
கூற்றத்தைக்கையால் விளித்தற்றாலாற்றுவார்க்
காற்றாதாரின்னா செயல்.

(என்பது.) மூவகையாற்றலுமுடையவர்க்கு அவ்வாற்ற லில்லாதவர் இன்னாதவைகளைமுற்பட்டுச்செய்தல் தானேயும்வருந்தன்மையனாகிய கூற்றுவனை அதற்குமுன்னேகைகாட்டிஅழைத்தால்ஒக்குமென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக அகஸ்தியர்பொதியமலைக்குப்போகும்வழியிலே வாதாவிஇல்வலனென்று இரண்டுபேர் இராக்கதர்அகஸ்தியரை வஞ்சிப்பதற்கெண்ணி வாதாவியை ஆடாகமேயச்சொல்லி இல்வலன்முனிவனுக்குப் பிராமணார்த்தஞ்சொல்லிஆட்டறுத்துச்சமைத்துப்போசனமிட்டு சஞ்சீவிமந்திரத்தினாலேவாதாவியைமுனிவன் கர்ப்பத்திலேயுர்ப்பவம்பண்ணி வயிற்றைப்பீறிக்கொண்டுவரச்சொல்லியழைத்தான் அந்தவஞ்சனையைமுனிவனறிந்து வாதாவிஜீரணஹாசுவாவென்று நாபியைத்தடவினார் அவன்வயிற்றில்சீரணமாகிப்போனான் இல்வலனையுங்கோபாக்கினியினாலே சாம்பலாக்க இருவரு மடிந்தார்கள்—(ஆதலால் இயமனைச்சபித்தாலும் பெரியோர்களுக்கபசாரம்பண்ணிப் பிழைப்பதில்லையெனக்கண்டுகொள்க.) (அஎ)

## பெண்வழிச்சேறல்.

சந்தநுவேந்தேழுதனையருயிரிழந்தான்
இந்துநுதற்கங்கையிரங்கேசா—அந்தோ
மனைவிழைவார்மாண்பயனெய்தார் வினைவிழைவார்
வேண்டாப்பொருளுமது.

(என்பது) இப்பங்காரணமாகத் தம்மனையாளைவிரும்பி அவள்வ
ழிநடப்பவர் தமக்கினியதுணையாகிய அறத்தையடையார்பொருள்சம்பாதி
ந்தலிலே முயல்பவர்அதற்குவிரோதமென்று இகழும்பொருளும் அவ்வி
ன்பமென நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளிராதலால் அதற்குதாரண
மாக வசிட்டர்தேவபூசைக்குப் பஞ்சகௌவியங்கொடுக்கப்போகிறகாமதே
னுவை அஷ்டவசுக்கள்வழியிலே மறித்துப்பிடித்துத்தங்கள்பதிக்குக்கொ
ண்டுபோகும்போது காமதேனுஅவ்வெட்டுப்பேரையுமிழுத்துக்கொண்
டுவசிட்டரிடம்போய் நடந்தசெய்தியைச்சொல்ல வசிட்டருக்குக்கோபம்வ
ந்து அவ்வெட்டுப்பேரையும் நீங்கள்பூமியில்போய் பிறக்கக்கடவீர்களென
றுசபிக்க அவர்கள்பயந்துமுனிவனைவணங்கிச் சுவாமிஎங்களால் இக்குற்ற
ம்நடந்ததென்று எங்கள்தலைவன்பேச்சை மறுக்கமாட்டாமல் நடந்ததென
அதைக்கேட்டமுனிவன் நீங்களேழுபேரும் பூமியிற்பிறந்தவுடனேயந்தச்
சொகநீங்கி வசுக்களாவீர்கள் இக்குற்றத்திற்குக் காரணமானவன் பூமியிற்
பிறந்துஅநேககாலம்அவடத்தில் சந்தியாகவிருந்துமுடிவில்பாரதயுத்தத்தி
ல் அருச்சுனன்கைப்பாணத்திலிறந்து வரக்கடவனென அச்சாபத்தையேற்
றுக்கொண்டு பூமியைநோக்கிவரும்போது வழியில்கங்கையைக்கண்டுஎங்
குபோறோயம்மாவென நான்பிரமன்சாபத்தால் பூலோகத்திற்போய்ப்பிறக்க
ப்போகிறேனென நாங்களும்வசிட்டர் சாபத்தால் பூமியிற்பிறக்கப் போகி
றோம் உன்கர்ப்பத்தில்வந்து பிறக்கிறோம்உடனேஎங்களைக் கொல்லுவித்
துமுன்போல்தேவலோகம்வரும்படி தயைசெய்யவேண்டுமென்று நடந்த
செய்திகளைச்சொல்ல அதற்குகங்கைசம்மதித்து பூமியில்வந்துசந்தனுமகா
ராசனை விவாகஞ்செய்துகொண்டிருந்தாள் அரசனுக்கவள் பேரிலிருந்த
மோகத்தால்அவள்சொல்லைமீறாமல் தனக்குப்பிறந்தபிள்ளைகளேழுவரை
அவள்சொற்படிக் கங்கையிற்போட்டுக்கொன்றார் எட்டாவதுகர்ப்பமாகவி
ருக்குங்காலத்தில மந்திரிமுதலானவர்கள அரசனைப்பார்த்து ஸ்திரீபேரில்
மோகத்தினால் சிசுவத்தியும்வம்சநஷ்டமுந் தேடிக்கொள்ளுகிறீர் இதுநன்
மையல்லவென்று கர்ணகடோரமானவசனங்களைச்சொல்ல எட்டாவதுபிள்
ளையைக்கொல்லாமல் அவள்மேல்மோகத்தையுநீர்த்தான் அந்தஎட்டாவ
துபிள்ளைபிறந்துவீஷ்டுமனென்று பெயர்பெற்று அநேகநாளிருந்தார்—(ஆ
தலால் ஸ்திரீகள்சொற்படி நடக்கவொண்ணாதெனக்கண்டுகொள்க.) (௬௬)

வரைவின்மகளிர்.

தொண்டரடிப்பொடியைத்தோளிருகவிக்குதலால்
எண்டிசையும்போற்றுமிசக்கேசா—கண்டிருந்தும்

தந்நலம்பாரிப்பார்தோயார்தகைசெருக்கிப்
புன்னலம்பாரிப்பார்தோள்.

(என்பது) ஆடல்பால்அழகென்பவைகளாலேகளித்துதம்புல்லிய நலத்தை விலைகொடுப்பவர்க்கெல்லாம் பரப்புமகளிரதுதோளை அறிவொழுக்கங்களாலாகிய தமதுபுகழையுலகத்தே பரப்புதற்குரிய வுயர்ந்தோர்தீண்டாரென்று நாயனார்குறளில்திருவாய் மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக தொண்டரடிப்பொடியாழ்வார்சீரங்கத்திலேநந்தனவனப்பணிவிடைசெய்து அரங்கநாதருக்குத்திருமாலை கொடுத்துக்கொண்டுமகாமுத்தராயிருந்தார் அவரையவ்வூரிலுள்ள ஒருதாசிதன்னிடத்துமோகங்கொள்ளும்படி மயக்கினதால் அவர்பிராரத்தகர்மத்தால் அவளிடத் திச்சைகொண்டு அவளைமருவிவருநாளில் ஆழ்வார்பொருள்கொடாமையால் அவள்தன்வீட்டுக்கு வரவேண்டாமென்றனள் அதனால்அவர் அதிகவிரகத்தால்வருந்தப்படுகிறதை அரங்கநாதனறிந்து ஒருபிராமணப்பிள்ளையாகவுருவங்கொண்டு அர்த்தராத்திரியில்சந்நிதியிலிருந்த ஒருபொற்கிண்ணத்தையெடுத்துப்போய் ஆழ்வார்கொடுக்கச்சொன்னதாக அந்தத்தாசிகையில்கொடுத்து ஆழ்வாரிடத்துக்குப்போய் அவள்வரச்சொன்னாளென்றுசொல்லிப்போனார் ஆழ்வாரும்அன்றிராத்திரியவள்வீட்டிலிருந்து உதயத்திற் புறப்பட்டுப்போனார்பின்புசந்நிதியிலிருந்த கிண்ணங்காணாமையால் காவற்காரர்தேடிதாசிவீட்டிற்கண்டு ஆழ்வாரைக்கள்வனென்று பிடித்துக்கொண்டார்கள் அச்சமயத்தில் சுவாமிபிரசன்னராய்வந்துவிடுவித்தார்—(ஆதலால்/வனசைக்கயவரானவர்கள் பெருமைகெடுமெனக் கண்டுகொள்க) (௯௨)

## கள்ளுண்ணாமை.

தக்ககுருமைந்தனென்புசார்ந்தமதுவுண்டசுக்கன்
எக்கருமஞ்செய்தானிரங்கேசா—மிக்க
களித்தறியேனென்பதுகைவிடுகநெஞ்சத்
தொளித்ததூஉமாங்கேமிகும்.

(என்பது) மறைந்துண்டுகள்ளுண்டறியேனென்றுஉண்டதைமறைத்தபொழுதுதமது ஆசாரத்தைச்சொல்லுதலை விடக்கடவர்அவ்வுண்டபொழுதேமுன் பிறரறிந்தால் இழுக்காமென்றுமனதிலொளித்தகுற்றமும் முன்னையளவின் மிகுந்துவெளிப்படுமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகப்பிரகஸ்பதிபகவான் குமாரனாயவன் சுக்கிராச்சாரியாரிடத்தில் வித்தியாப்பியாசம்பண்ணிக்கொள்ள வந்திருந்தகாலத்தில் அசுரர்கள் அந்தப்பிள்ளையின்மேல் பொறாமையால்அநேகமுறைகொன்றார்கள்

அந்த அந்தக்காலத்திலும் ஆசாரியன் சஞ்சீவிமந்திரத்தால் எழுப்பினதுக
ண்டு பின்பு அந்தப்பிள்ளையையொருநாள்காட்டி லழைத்துக்கொண்டுபோய்
கொன்றுகல்லின்மீதுவைத்தரைத்து மதுவிற்கரைத்து ஆசாரியர்க்குக்கொ
ண்டுவந்து கொடுக்கஅவரறியாமல் பொசித்துவிட்டார்பின்பு போசனவே
ளையில் அப்பிள்ளையைக்காணுமற்றேடி அகப்படாமையால் ஞானதிருஷ்டி
யாற்பார்த்துத் தன்வயிற்றிலிருப்பதைக்கண்டு சஞ்சீவிமந்திரத்தாலுருவு
ண்டுபண்ணி யெழுப்பிஅப்பிள்ளைக்கு அந்தசஞ்சீவிமந்திரத்தையுபதேசி
த்துத் தன்வயிற்றைப்பீறிக்கொண்டுவெளியில்வந்து தன்னையெழுப்பச்செ
ய்தார்—(ஆதலால் கள்ளுண்டவர்மனதிலே இரகசியந்தங்காதெனக்கண்டு (௬௩)
கொள்க.)

## சூது.

தன்மர்துரியோதனனுடனே சூதாடி
இன்மையுற்றானன்றேயிரங்கேசா—நன்மைப்
பொருள்கெடுத்துப்பொய்மேற்கொளீஇயருள்கெடுத்
தல்லலுழப்பிக்குஞ்சூது.

(என்பது)சூதாட்டமானது தன்னைப்பழகினவனது பொருளைக்கெ
டுத்துப் பொய்யைமேற்கொள்ளப்பண்ணி மனதிலெழுகிற அருளைக்கெடு
த்து இவ்வழியால்அவனையிருமையிலும் துன்பமுறுவிக்குமென்றுநாயனா
ர்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக தருமபுத்
திரர்துரியோதனனுடனே சூதாடித் தன் ஆதினமுமழிந்துபன்னிரண்டுவரு
ஷம் வனவாசத்திற்றுக்கத்தையடைந்து ஒருவருஷம்அக்கியாதவாசஞ்செ
ய்து யுத்தத்தில்அசுவத்தாமா அதாகுஞ்சரமென்று பொய்யுஞ்சொல்லிகி
ளைஞரையும் உறவின்முறையாரையுங்கொன்றார்—(ஆதலால்சூதாடல்தவி (௬௪)
ரவேண்டுமெனக் கண்டுகொள்க,)

## மருந்து.

அம்பரீடன்வேள்விநுகர்ந்தக்கினிக்குமந்தமுற்ற
தென்பதறிந்துமிரங்கேசா—தன்பசியின்
றீயளவன்றித்தெரியான்பெரிதுண்ணின்
நோயளவின்றிப்படும்.

(என்பது) தன்சரீரசுவாவமும் அதற்கேற்றவுணவும் காலமும் ஆ
ராய்ந்து வேண்டியவுணவை வேண்டியகாலத்து வயிற்றுத்தீயளவல்லாம
ல்ஒருவன்மிகவுண்ணுவானாயின் நோயானது அளவில்லாமல்அவனிடத்தே
வளருமென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்கு
தாரணமாகஇரகுவம்சத்துஇராசாவாகிய அம்பரீடனமகாராசன் பன்னிர

ண்டுவருஷம் யானைத்துதிக்கைபோல ஆகுதிகொடுத்து யாகம்பண்ணஅந்
தயாகத்திலே அக்கினிபகவானின்று அதிகமான ஆகாரங்கொண்டபடியால்
வயிறுமந்தாக்கினியாகவிருந்து நெடுங்காலந் துன்பப்பட்டான்—ஆதலால்
பசியறிந்தவளாகப் புசிக்கவேண்டுமெனக்கண்டுகொள்க) (௪௫)

மூன்றாவது-அமைச்சியல் முற்றும்.



## நான்காவது-ஒழிபியல்.



### குடிமை.

தாடணமாலைமைவருடன் றுன்னுதலென்றேகன்னன்
எடணையைநீத்தானிரங்கேசா—நீட
அடுக்கியகோடிபெறினுங்குடிப்பிறந்தார்
குன்றுவசெய்தலிலர்.

(என்பது) பலவாகஅடுக்கிய கோடியளவினதாகிய பொருளைப்பெ
ற்றாலும்உயர்ந்தகுடியிலேபிறந்தவர் தம்மொழுக்கங்குன்றுந்தொழில்களை
ச்செய்யாரென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினா ராதலால்அதற
குகாரணமாக ஸ்ரீகிருஷ்ணதேவர் துரியோதனனிடத்துத் தூதுபோய்பதி
னெட்டுநாளைய யுத்தத்துக்குக்கையேற்றுக்கொண்டுவரும்போது குந்தியம
மைக்கொண்டுகன்னன் தன்பிள்ளையெனத்தெரிவித்து பாண்டவர்களோடு
சேர்ந்துகொண்டால் நீயரசனாகவிருந்துஐவரும் உன்னைவணங்கிவாழ்வார
களென்றுசொல்லியுங் கேளாமல்துரியோதனனிடத்தில் அவனன்னத்தைச் சாப்பி
ட்டுசமயத்தில்அவனைக்கைவிடுதல் தருமமல்லவென்று சொல்லித் தாயாகி
யகுந்தியம்மனுக்குச்செலவுகொடுத்தனுப்பிவிட்டு யுத்தத்தில்சேவனையும்வி
டடான்—(ஆதலால் நல்லகுடியிற்பிறந்தவர் தருமவிரோதமானகாரியத்து (௪௬)
க்குடன்படாரெனக் கண்டுகொள்க.)

### மானம்.

ஆகங்குறைந்தருவேவுருணனில்லானைவிடுத்
தேகினனேவேந்தனிரங்கேசா—ஆகையால்
குன்றின்னையாருங் குன்றுவர்குன்றுவ
குன்றியனையசெயின்.

(என்பது) குடிப்பிறப்பால் மலைபோலுயர்ந்தவரும்தாழ்தற்கேது
வாகிய செயல்களை ஒருகுன்றியளவாயினும் செய்தலால்தாழ்வரென்றுநாய

னார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகநளச்சக்கிரவர்த்தி அர்த்தராத்திரியில்வடுக்காட்டிலேதமயந்தியைவிட்டுப்பிரிந்தகால் தேகமுழுதுங்குறைந்து சரீரங்கறுத்து உருமாறிப்போயிருந்து பின்பு தமயந்தியைக்கண்டு சுயரூபமானான்—(ஆதலால் அறிவுடையார்மதிமயக்கத்தால் தகாதகாரியங்களைச்செய்தால் குன்றுவாரெனக்கண்டுகொள்க.) ()

பெருமை

மண்பாரவுசக்கரத்தை மாலெடுப்பவீட்டுமனார்
எண்புகழாக்கொண்டா ரிரங்கேசா—பண்பாற்
பெருமையுடையவ ராற்றுவாராற்றின்
அருமையுடையசெயல்.

(என்பது,)பெருமையுடையவராயினோர் தாம்வறியாராகியவழியும்பிறராலேசெய்தற்கு அருமையுடையவையாகிய தஞ் செயல்களை அவைசெய்யும்வழியால் முடிவுபெறச்செய்ய வல்லராவரென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக பாரதயுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணதேவர் ஆயுதமெடுக்கிறதில்லையென்று சொல்லியபோது வீஷ்மாச்சாரியார் நான் ஆயுதமெடுக்கச்செய்கிறேனென்று பிரதிக்கினை சொல்லி அந்தப்படி சக்கரமெடுப்பிக்கச்செய்தார்—(ஆதலால் பெரியோர்கள்நினைத்தபடி முடிப்பாரகளெனக்கண்டுகொள்க (௬௩)

சான்றாண்மை.

புத்தனைநீகற்கும் புராரிபதமளித்தான்
இத்தரணிபோற்றுமிரங்கேசா—மெத்தவே
இன்னாசெய்தார்க்கு மினியவேசெய்யாக்கால்
என்னபயத்ததோ சால்பு.

(என்பது) சால்புடையவர் தமக்குத் துன்பந்தருமவைகளைச்செய்தவர்களுக்கும் இன்பந்தருமவைகளையே செய்யாவிட்டால் சான்றாண்மை வேறேயென்னபயனுடைத்தென்று நாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக ஈஸ்வரன் மறுசமயக்காரனாகியபுத்தன் நாளொன்றுக்கு மூன்றுகல் மடியிற்கட்டிக்கொண்டுசிவாலயத்தைக்காணும்போதெல்லாம் சிவலிங்கத்தின்மீது அக்கல்லையெடுத்தெறிந்து வருவான் அப்படி செய்தவனுக்குங்கைலாயமளித்தார்—(ஆதலால் தீமைசெய்தவருக்கும் நன்மைசெய்யவேதகருமமெனக்கண்டுகொள்க.) (௬௪)

பண்புடைமை.

தான்பமுறாக்கதையைச்சொல்லித்திட்டனார்
இன்பமுற்றான்றே விரங்கேசா—அன்பில்

நகையுள்ளுமின்னா திகழ்ச்சிபகையுள்ளும்
பண்புளபாடறிவார் மாட்டு

(என்பது.) தன்னையிகழ்தல்ஒருவனுக்குவிளையாட்டினிடத்தும் துன்பந்தருவதாம் ஆதலால்பிறரியல்பறிந்து நடப்பவரிடத்து பகையுள்ளவிடத்தும் அப்பகையுண்டாகாமல்இனிமையாகிய பண்புகளேஉண்டாவாமென்று நாயனார் குறளில். திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக பாரதயுத்தத்தில்பதின்மூன்றாநாள்போரில்அபிமன்னனோடுவீமசேனன் கூடாதபடிசயிந்தவன்தடுத்ததால் அபிமன்னுஒருவருஞ்சகாயமில்லாமலிறந்தானாதலால் அருச்சுனன் அதுசெய்திகேட்டு என்மகன் சாதற்குக்காரணமாகவிருந்த சயித்திரதனைநாளையுத்தத்தில்அஸ்தமிப்பதற்குள்ளாகக் கொல்லாமற்போவேனானால் அக்கினிப்பிரவேசமாவேனென்றுசபதம்பண்ணினான் அதைத்தருமராஜனறிந்து சயித்திரதனிறந்தால்தங்கைதுன்பப்படுவாளென்று கருதி நாளையுத்தத்தில் சயிந்தவனைப் பாதுகாக்கும்படி துரியோதனனுக்குச்சொல்லியனுப்பினார் (ஆதலால்நன்மைதீமையறிந்த பெரியோர்நற்குணமவிடார்களெனக் கண்டுகொள்க) (௱)

## நன்றியில்செல்வம்.

செப்புமிருநிதிகள்சேர்ந்துங்குபேரனுக்கு
எப்பொருளாலென்னாமிரங்கேசா — கைப்பொருள்
அற்றார்க்கொன்றுதான்செல்வமிகநலம்
பெற்றாடமியண்மூத்தற்று

(என்பது.) ஒருபொருளுமிலராயினோர்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கொடாதவனது செல்வமானது விவாகக்கழிதல் பெண்டீரின் மிகுந்தநலத்தினைப் பெற்றவொருத்திகொடுப்பாரில்லாமையினாலே கணவனில்லாமல் தனியளாய் மூத்ததன்மைத்தென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக குபேரன் அளவற்றதிரவியமும் சங்கநிதி பதுமநிதியையுமுடையவனாய் உலகத்திலொருவரிடத்துமில்லாத திரவியங்கள்பொக்கிஷத்திற் சேர்ந்திருக்கவும்வரம்பெற்றும்அந்தத்திரவியம் யாருக்குமுபகாரமில்லை (ஆதலால்பிறருக்குபகாரமில்லாதவன் பொன்காத்தபூதமெனக்கண்டுகொள்க. (௱க)

## நாணுடைமை

வாலிபுகுந்தவலம்விரித்தானோனாயினை
ஈவதனைமீண்டானிரங்கேசா — பூவுலகில்
நாணாலுயிரைத்துறப்பருயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார்நாணாள்பவர்

(என்பது) நாணத்தைதனக்குச்சிறப்பறிந்து விடாதுநடப்பவர் அந்நாணுளாயிருக்கூடிநிற்கமாட்டாதவிடத்துநாண்சிதையாமற்பொருட்டு உயிரைநீங்குவார் உயிர்ச்சிதையாமற் பொருட்டு நாணினை நீக்காரென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக துரியோதனன் பதினேழாம் நாள் யுத்தஞ்செய்து சகலசேனைகளையுமடித்துப் பதினெட்டாநாள் தான் தனியாகவிருந்து இறந்தவர்களையெல்லாமெழுப்பிவிடுகிறேனென்றுஒர்தடாகத்தில் சலத்துக்குள்ளிருந்துதவம்பண்ணினான் அதைவீமசேனன் கிருஷ்ணனாலறிந்து அத்தவம் முடிவதற்குமுன்னே அக்குபோய் துரியோதனனைப் போருக்கழைக்க அவன் சத்துருவைக்கண்டொளிக்கானென்னும் அபகீர்த்திக்கஞ்சி வெளியிற்புறப்பட்டு யுத்தம்பண்ணிப்பிராணனை விட்டான்—ஆகலால்நாணைக்காக்கும்பொருட்டுப்பிராணனையொருபொருளாக நினையார்களெனக் கண்டுகொள்க) (௬௨.)

## குடிசெயல்வகை.

ஆனையடிமைக்கழுதுகொணர்ந்தெள்ளலுடன்
இன்னல்துடைத்தானிரங்கேசா—உன்னுங்கால்
நல்லாண்மையென்பதொருவற்குத்தான்பிறந்த
இல்லாண்மையாக்கிவிடும்

(என்பது.) ஒருவனுக்குநல்லாண்மையென்று சொல்லப்படுவது தானுற்பவித்த குடியையாளுந்தன்மையைத் தனக்குண்டாக்கிக்கொள்ளுதலென்று நாயனார் குறளிற்றிருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக விந்தையுங்கத்துருவையும் காசிபரிடத்திற்சென்று விந்தைதனக்குஇரண்டுபிள்ளை வேண்டுமென்றும் கத்துருவைதனக்குஆயிரம்பிள்ளை வேண்டுமென்றுங்கேட்க அவரப்படியேவரங்கொடுத்தனுப்பபின்பு சிலநாளில்கத்துருவை ஆதிசேடன்முதலிய ஆயிரம்பிள்ளையும்பெற்றுச்சந்தோஷித்திருக்க விந்தை நெடுநாளாகியும் தான் பெற்றமுட்டைகளிரண்டும் பிள்ளையாகாமல் சும்மாவிருந்ததைக்கண்டு கெட்டுப்போயிற்றேயென்னமோவென்று அவசரப்பட்டு அவைகளிலொன்றை யவசரப்பட்டுடைத்துப்பார்க்கஅதில்நின்றும்அருணன்நாள்நிரம்பாமையால் இடுப்புவரையிலுருவமுண்டாகி மற்றவையில்லாமற்பிறந்துதாயைப்பார்த்து இன்னுமற்றநாளுமபொறுத்து நான்பிறந்தால்மிகவும்வீரனாகயிருப்பேனீயவசரப்பட்டதால்நான்காலில்லாதவனானேன் இப்படிநானாகச்செய்தமையால் நீயுன்தங்கைக்கு அடிமையாவாளென்றுசபித்தான்நான்தெரியாமையாற்செய்தகுற்றத்து

க்குப்பொறுக்காமல் இப்படிப்பட்ட சாபங்கொடுத்தாயேஇதுஎப்போதுநி வர்த்தியென்று தாய்கேழ்க்க இன்னமிருக்கிற ஒருமுட்டையையும் அதற் குநான்வருகிறவரையில்பாதுகாத்தல் மிகவும்வீரனாகியகருடன்பிறப்பான் அவனாலிந்த அடிமைத்தன்மைநீங்குமென்றுசொல்லி அருணன் சூரியன் தேருக்குச் சாரதியாகச்சென்றான்பின்பு விந்தைஅம்முட்டையைப் பாது காத்துவருகையில் ஒருநாள்விந்தையுங்கத்துருவையுஞ்சமுத்திரக்கரையோ ரமாகவுலாத்தும்போது தேவேந்திரன்குதிரையாகிய உச்சச்சிரவமென்ப து புல்மேய்ந்துகொண்டுபோகும்போது விந்தையென்பவள் தங்கையைப் பாாத்து இந்தக்குதிரைசுத்தவெள்ளையென்றாள் இல்லைஅதற்குவாலில்கறு ப்புள்ளதென்றுதங்கைசொன்னாள் ஆனாள் நாளைக்குப்பார்ப்போம் இதில் தோற்றவர்கள் கெலித்தவர்களுக்கடிமையாகிறதென்று சபதஞ்செய்துகொ ண்டுவந்துவிட்டார்கள் மறுநாள் அவடம்வந்துபார்ப்பதற்குமுன்னே தன் பிள்ளைகளிலொரு கரும்பாம்பை அக்குதிரையின்வாலில்சுற்றிக் கொள்ளு ம்படிசெய்து இருவரும்போய்பார்க்கும்போது வாலில்கருமைதோன்றின தால் விந்தைதங்கைக்கடிமையாகி சிறுமைப்பட்டுக்கொண்டிருந்தாள்பின் பு சிலநாளில்கருடன்நாள்நிரம்பிப் பிறந்துதாய்தங்கைக்கடிமையாயிருப்ப து தெறிந்துசிறியதாயிடத்தும் அவள்பிள்ளைகளிடத்தும்வந்து உங்களுக் கெதுகொடுத்தால் என்தாயடிமையை நீக்கிவிடுவீர்களென்றுகேழ்க்கஅப் பொழுதுசேடன்முதலியபாம்புகள் எங்களுக்குத்தேவாமுதங் கொண்டுவ ந்துகொடுத்தால் இந்தஅடிமையைநீக்கி விடுகிறோமென்றுசொல்ல அப்ப டியே கருடன்தேவலோகம்போய்சகலதேவர்களையும்வென்று தேவேந்திர னையுமுதவுகொடுக்கும்படிசெய்து தேவாமுதத்தையும் அவர்கள்கண்ணு ற்காணக்கொடுத்து தன்தாய்அடிமையு நீக்கிக்கொண்டான்.—(ஆதலால்ஒ ருவனுக்காண்மையென்றுசொல்லுவது தன்குடியையுயர்த்திக் கொள்ளுத லெனக்கண்டுகொள்க.) (௬௩)

உழவு.

வன்பாரதத்தலங்கை வைத்தார்க்கெதிரில்லை
என்பாரதனு லிரங்கேசா—முன்பா
உழுவாருலகத்தார்க்காணியஃதாற்று
தெழுவாரையெல்லாம்பொறுத்து.

(என்பது)உழுதவல்லவர் அவ்வுழுதலைச் செய்யமாட்டாமல் பிறர் தொழில்களிலேமேற்சொல்வோர்யாவரையும் தாங்குதலால்உலகத்தாராகி யதேர்க்கு அச்சாணியாவரென்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினு

ராதலால் அதற்குதாரணமாகபாரதயுத்தத்தில் ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனன்பக்கும், பலபத்திரரும்பதினாயிரம்ராக்காரரும்துரியோதனன்பக்குமாக இருந்ததால் விற்படைவேற்படைவாட்படை ஆட்படை குதிரைப் படை தேர்ப்படையாகிய அறுவகைப்படைகளும் பலபத்திரர்கையின் கண்ணுள்ள கலப்படைக்கு நிகரல்லவென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் பலபத்திரராமரை வஞ்சனைசெய்து பூமிப்பிரதட்சணஞ்செய்யும்படிசெய்வித்தார். (ஆதலால் உழுபவர்உலகத்தாராகியதேர்க்கு அச்சாணியாவாரெனக்கண்டுகொள்க.) (௰௪)

## நல்குரவு

காலனும்பஞ்சாலன்கண்டுதுரோணனைநீர்
ஏகவென்றானன்றேயிரங்கேசா — நாவில்
அறஞ்சாராநல்குரவீன்றதாயானும்
பிறன்போலநோக்கப்படும்.

(என்பது)அறத்தோடுபொருளில்லாத வறுமையையுடையவன்தன்னைப்பெற்றதாயினாலும்அன்னியன்போலேநினைத்துப்பார்க்கப்படுவனென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாரதலால்அதற்குதாரணமாகபாஞ்சாலனுந்துரோணாச்சாரியரும் பாலியத்திலேகமாகவிருந்தகாலத்தில் பாஞ்சாலன்தனக்குப்பட்டாபிஷேகம்வந்தகாலத்தில் உமக்குப்பாதிராச்சியங்கொடுக்கிறேனென்று துரோணாச்சாரியருக்குச்சொல்லிப்பின்பு அவர்தன்பிள்ளைக்குப்பால்வேண்டிப் பாஞ்சாலனிடத்தில்வந்தபோது துரோணாச்சாரியரைக்கண்டு ஏழ்மையாயிருத்தலினால்நீரென்றுகேட்கஎன்னையறியீரா நீருநானும்சதுர்வேதங்கற்றுக்கொள்ளுங்காலத்தில் எனக்குப்பட்டம்வந்தால்உமக்குப் பாதிராச்சியங்கொடுக்கிறேனென்றுசொல்லியிருந்தீரே மறந்துபோனீரோவென ஓகோ வழக்குக்குவந்தீரோவென்று அவரைத்தள்ளிவிடச்சொன்னான். — (ஆதலால் வறியவன்றன்றாயாலுமந்நியன்போலப்பார்க்கப்படுவானெனக்கண்டுகொள்க.) (௰௫)

## இரவு

அக்கியும்பர்கோன்காவருந்தினைந்தர்ச்சுனன்பால்
இங்கிதமாப்பெற்றானிரங்கேசா — மங்கா
இரத்தலுமீதலேபோலுங்கரத்தில்
கனவிலுந்தேற்றாதார்மாட்டு.

(என்பது)தமக்குள்ளது மறைத்தலைசொப்பனத்திலும்அறியாதவரிடத்துயாசித்தலும்வறியவர்க்குக்கொடுத்தலேபோலுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாரதலால்அதற்குகாரணமாக அக்கினிதே

வன்காண்டாவனத்தைப்பட்சிக்கவேண்டி அருச்சுனனிடத்துப் பிராமண வுருவமாகவந்து தனக்குஆகாரங்கேட்க அப்படியேகொடுக்கிறேமென்று தந்தம்பண்ணி தேவர்களோடுபோர்செய்து யாவரையுஞ்செயித்து அக்கினிதேவனுக்கு ஆகாரங்கொடுத்தான்.—(ஆதலால்சொர்ப்பனத்திலு முனுத்தருணமில்லாதவரிடத்தில் யாசித்தலுங்கொடுத்தலேபோலுமெனக்கண்டுகொள்க.) (௩௬)

## இரவச்சம்

சென்றுபசிபக்கல்செங்கைவிரித்தேற்றல்பழு
தென்றுகுன்றின்றுயிரங்கேசா—நன்றிதரும்
ஆவிற்குநீரென்றிரப்பினுநாவிற்
கிரவினிளிவந்ததில்

(என்பது.)தண்ணீர் பெறுகிறக்கு நிலைமையதாகியபசுவுக்குத்தரும் நோக்கியிதற்குத்தண்ணீர்தரல்வேண்டுமென்று இரந்துசொல்லும்போதும் அவ்விரவுபோல் ஒருவனாவிற்கு அவமானம்வந்ததுவேறில்லையென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாகபலிசக்கிரவர்த்தித் திரிலோகமுந்தன்னதாக்கிக்கொண்டு அவற்றையாகத்தில் பிராமணருக்குக் தத்தம்பண்ண நினைத்தகாலத்தில்தேவர்கள்தாங்களிருப்பதற்கிடமில்லையேயென்றுதிருப்பாற்கடற்கரையினின்றுமுறையிடசுவாமிபிரசன்னமாய் தேவர்களுக்குஅபயஸ்தங்கொடுத்து முன்நரசிங்கவவதாரத்தில் பிரகலாதனனுக்குஇனிஅசுரர்வம்சத்தைக் கொல்லுவதில்லையென்றுவாக்குத்தத்தம் பண்ணினமையால் பலிசக்கிரவர்த்தியைக் கொல்லவொண்ணாதென்று வாமனவுருவங்கொண்டு அவனதுயாகசாலையிற்புகுந்து தன்னுடையஇரண்டுலட்சத் தைம்பதினாயிரம் யோசனை தூரம்பருத்தும் நீண்டுமிருக்கும் சரீரத்தைஇரப்பென்கிற இகழ்ச்சியினாலேகுறைந்துவந்து மூன்றடிமண்கேட்டார்.—(ஆதலால் நல்லவழியில் ஒருவரிடத்திற் கேட்டுவாங்குதலும் இழிவெனக்கண்டுகொள்க.) (௩௭)

## கயமை.

தேனிருந்தசொல்லாளைத் தேர்வேந்தர்காணவுடை
யேனுரிந்தான்மேனனிரங்கேசா—ஆனாலும்
நன்றறிவாரிற்கயவர்திருவுடையர்
நெஞ்சத்தவலமிலர்.

(என்பது) தமக்குறுதியாயினவைகளை அறியவரின் அவையறியாதகீழ்மக்கள் நன்மையுடையவராவர் அவர்போலத் தமது நெஞ்சினிடத்து அவலகாரணமாகக் கவலையிலர் ஆதலால்என்றுநாயனார்குறளில்திருவாய்

மலர்ந்தருளினா ராதலால்அதற்குதாரணமாக துரியோதனன் திரௌபதி யைச் சபையிற்கொண்டுவந்து அவமானப்படுத்துகிறபோது இது உபயகுலத்துக்கும் பழுதென்றும்பதிவிரதையையவமானஞ்செய்கிறது பாவமென்றும் விசாரியாமல்சபையிற்றுயிலுரிந்தான்.—(ஆதலால் நன்மைகளையறிபவரிலும் நெஞ்சிற்கவலையில்லாதவராகிய கீழ்மக்கள் நன்மை யுடையவரெனக்கண்டுகொள்க.) (ய௮)

இரண்டாவது-பொருட்பால் - முற்றும்.

## மூன்றாவது-காமத்துப்பால்.

முதலாவது ஆண்பாற்கிளவிகள்

### தகையணங்குறுத்தல்

சுந்தரமாமகலிகைதோள்தோய்ந்துபத்துநூ
றிந்திரன்கண்ணுற்றானிரங்கேசா—இந்துமுறி
யொண்ணுதற்கோஒ வுடைந்ததேஞாட்பினுள்
நண்ணாருமுட்குமென்பீடு

(என்பது)போர்க்களத்துஎதிர்த்தில்லாதபகைவரும்எதிர்த்தவர்வாய்ச்சொற்கேட்டு அஞ்சுதற்கு ஏதுவாகியஎன்வலி இம்மாதருடைய ஒளிபொருந்திய நெற்றியொன்றற்குமே அழிந்துவிட்டதென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக இந்திரன் அகலிகையைக்கண்டு மோகஞ்சகியாமல் கபடமாய்கௌதமரைப்பிரிவித்து அவளையநுபவித்து கௌதமர்சாபத்தால் ஆயிரங்கண்ணுருவமாகப்போய் அவளையநுபவித்து கௌதமர்சாபத்தால் ஆயிரங்கண்ணுருவமாகப்போய்

கடைப்பெற்றுத்தன்பெருமையிழந்தான்.—(ஆதலால் சுந்தரமானமாதரைக்கண்டவிடத்தில்தன்சௌரியமில்லாதெனக்கண்டுகொள்க.) (௱௬)

### குறிப்பறிதல்.

மைதவிலோசனமு மேவுமிணைநோக்கும்
ஏதுகலவிக்கிரங்கேசா—ஆகலால்
கண்ணொடுகண்ணிணைநோக்கொக்கின்வாய்ச்சொற்கள்
என்னபயனுமில.

(என்பது) காமத்துக்குரியவிருவருள் ஒருவரது கண்களோடுமற்றொருவர்கண்களின் பார்வையாலொக்குமாயின் உண்மை தோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையனவல்ல என்று நாயனார் கு

றளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக பரமசிவன் கைலாயத்தினொருபுறத்தில் உத்தியானவனத்தில் பார்வதியுடனேயேகாந்தமாகவிருக்கைகயில் அதற்குத்தேவர்களானோர் [illegible] பார்வதி தம்முடையகர்ப்ப [illegible] தம்பன் [illegible] ள்சுயஸ்திரீயினிடத்துப் புத்திரில்லாமற்போகச்சபித்து [illegible] லவந்தபுருஷாள் ஸ்திரீயாகப்போம்படிசபித்தான் [illegible] இளையென்னுமிராசன் அந்தவனத்தில்வந்தபோது ஸ்திரீயானான்பின்பு அந்தஇளையென்பவள் அந்தவிடங்களிற்சஞ்சரிக்கின்றகாலத்தில் புதனெதிர்ப்பட்டுஇருவர்பார்வையும் ஒத்தமையால்இருவரும் காந்தர்வவிவாகஞ் செய்துகொண்டதில் அவர்களுக்குப்புரூரவன் பிறந்தான்—(ஆதலால் இருவர்பார்வையும் ஒத்தால்தூதாற்பயனில்லையெனக் கண்டுகொள்க.) (௱௰)

## புணர்ச்சிமகிழ்தல்.

உம்பரிற்றுன்முகனுருற்றகங்கைதோள்தோய
இம்பர்வந்தாரன்றேரிரங்கேசா—அன்பாகத்
தாம்வீழ்வார்மென்றோட்டுயிலினிதுகொல்
தாமரைக்கண்ணானுலகு.

(என்பது) ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்குதாம்விரும்புமகளிரது மெல்லியதோள்களிடத்துத் துயிலும்துயில்போலஅவைகளைத்துறந்தயோகிகளால் அடையப்படுவதாகியகமலக்கண்ணனதுலகம்வருந்தாமலடையக்கூடுவதோஎன்று நாயனார்குறளில்திருவாய் மலர்ந்தருளினாராதலால்அதற்குகாரணமாக தேவேந்திரனுடையகொலுவுக்குக் கங்கைவந்தபோது வாயுபகவான் அவள்ஆடையைநீக்கஅப்போது சகலதேவர்களுமகண்களைமூடிக்கொள்ள துன்முகனொருவனும் கண்களைத்திறந்துஅவளவயவங்களைவிரும்பிப்பார்த்தமையால் துன்முகனைப்பூமியிற்போய்பிறந்து கங்கையையனுபவித்து வரும்படி இந்திரன்சபித்ததால் அப்படியே துன்முகன்யயாதிக்குபுத்திரனாகப்பிறந்து சாபத்தினாலேபூமியிற்பிறந்து வந்திருந்தகங்கையை விவாகஞ்செய்துகொண்டு இருவருமொருமனதாகிச்சேர்ந்திருந்தார்—(ஆதலால்பரமபதத்திலும்இவ்வின்பம் பெரிதென்றுணைக்கண்டுகொள்க.) (௧௧௧)

## நலம்புனைந்துரைத்தல்.

ஒண்கயற்கட்பாரதியையோதுமறைநாவில்
என்கண்ணன்வைத்தானிரங்கேசா—பண்பில்
அணிச்சமுமன்னத்தின்றூவியுமாதர்
அடிக்குநெருஞ்சிப்பழம்.

(என்பது) உலகத்தாரால் மேன்மை கெடுக்கப்பட்ட அனிச்சமலரும் அன்னப்பறவையினிறகும் பெண்களினடிக்கு நெருஞ்சிப் பழம்போல வருத்தஞ்செய்யுமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக பிரமதேவர்சரஸ்வதியிடத்தில் மோகத்தினாலே நால்களினருமையறிந்து நாவிலேவைத்துக்கொண்டார் திருமால்மார்பிலேவைத்துக்கொண்டார் சிவன்சடையிலேவைத்துக்கொண்டார்—(ஆதலால் அனிச்சமலரும் அன்னத்தினிறகும்மாதர்களடிக்கு நெருஞ்சிப்பழம்போலவருத்தாதிருக்குமெனக் கண்டுகொள்க) (௧௧௨)

## காதற்சிறப்புரைத்தல்

சேர்ந்துதிருமகளைத்தெள்ளமுதேழும்பருக்கே
ஈந்தவுதாரமிங்கேசா—தேர்ந்தக்கால்
பாலொடுதேன்கலந்தற்றேபணிமொழி
வாலெயிறூறியநீர்.

(என்பது) இம்மெல்லியசொல்லையுடையவளது வெண்பல்லினூறியநீரானது பாலுடனேதேனைக்கலந்த கலவைபோலுமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக தேவர்களுக்காகத்திருப்பாற்கடலைக்கடைந்து அதிலுறபவித்த ஸ்ரீமகாலட்சுமியைத் திருமாலானவர் தனதுமார்பிலேதரித்துக்கொண்டு அதராபானஞ்செய்ததால்இதற்குச்சரியல்ல அமிர்தமென்று அவ்வமிர்தத்தைத் தேவர்களுக்குச் செலவிட்டார்—(ஆதலால் கலவியினின்பத்திற்கும் அதராபானவின்பத்திற்கும்அமுதமொப்பல்லவெனக் கண்டுகொள்க.) (௧௧௩)

## நாணுந்துறவுரைத்தல்.

கீசகன்பாஞ்சாலியின்மேற்கேவலமால்கொண்டியதோற்
றேசுதலையுற்றானிங்கேசா—ஆசையெனும்
காமக்கடும்புனலுய்க்குமேநாணொடு
நல்லாண்மையென்னும்புணை.

(என்பது) நாண்தன்னைக்கடத்தற்குக்கொண்ட நாணமும்நல்லாண்மையும் ஆகியபுணைகளை காமமாகிய கடியவெள்ளமானது என்னிடம்பிரித்துக்கொண்டு போகின்றதுஎன்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாகபாண்டவர்கள் விராடபுரத்தில் அஞ்ஞாதவாசம்பண்ணும்போது கீசகன்துரௌபதியைக் கண்டுமோகித்துஅதனால் விரகவேதனைப்பட்டு மிகவும்வருத்தமடைந்தகாலத்தில் சிலதோழிகளோடுதுரௌபதியும்கீசகன்வீட்டுக்குப் பலகாரமெடுத்துக்கொண்டுவந்தபோ

னபோது கீசகன்தொடர்ந்துதாத்திவா அதனைக்கண்டகாந்தருவனொருவன்பூமியின்கண்வந்து கீசகன்காலைப்பிடித்துச்சுழற்றியெறிந்துவிட்டுப்போனான் அதன்பின்பு ஒருநாளிரவில்அவனைசிங்காரவனத்தில் வந்தபோதுவீமசேனன்கொன்றான்—(ஆகலால் நாணமும்ஆண்மையுமாகிய புணைகளைக்காமவெள்ளமானது கொண்டுபோகின்றதெனைக் கண்டுகொள்க,) (௧௧௪)

## அலரறிவுறுத்தல்.

நீந்துகடன்மூழ்கிநெடுநாட்கௌதமனார்
ஏந்தகலிதோய்ந்தாரிரங்கேசா—மாந்தி
களித்தோறுங்கள்ளுண்டல் வேட்டற்றாற்காமம்
வெளிப்படுந்தோறுமினிது.

(என்பது) கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறும் கள்ளுண்ணுதல் இனிதாம் விதம்போல்எனக்குக் காமமானது வெளிப்படுந்தோறும் இனிதாகாநின்றது என்றுநாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக திருப்பாற்கடலில் அகலிகைபிறந்தபோது இருடிகளுந் தேவர்களும்அந்தக்கன்னிகைமீது இச்சைகொண்டு திருமாலிடத்துவந்து எனக்குனக்கென்று வாதாடியபோதுதிருமாலானவர் அந்தக்கன்னிகைமீது இச்சைகொண்டவரெல்லாம் இந்தச்சமுத்திரத்தில் மூழ்கியிருந்துஎழுந்திருப்பீராகில் எல்லாருக்கும்பின்னாலுங்களில்யார் யெழுந்திருக்கிறீர்களோ அவர்களுக்குக்கொடுப்பேனென்றுசொல்ல அப்படியே அந்தப்பெண்ணை யிச்சித்தவர்கள்யாவருங்கடலின்மூழ்கி நெடுநாளிருந்து ஒவ்வொருவராகஎழுந்திருக்ககௌதமர்மாத்திரம்இன்னும் எழுந்திராமலிருப்பதை இந்திராதிதேவதைகளுந் திரிமூர்த்திகளுங்கண்டு அவரிடத்தில்வந்து கூவி எழுப்பிஅவருக்குஅகலிகையை விவாகம்பண்ணிக்கொடுத்தார்—(ஆதலால் ஒருவருக்கு காமம்யாவருமறிய வெளிப்படுந்தோறும் இனிதாமெனக் கண்டுகொள்க.) ௧௧௫

முதலாவது - ஆண்பாற் கிளவிகள்

முற்றும்.

## இரண்டாவது - பெண்பாற்கிளவிகள்.

## பிரிவாற்றாமை.

தன்பதியின்செல்கையினாற்றாவிலதியாயினாள்
என்பர்களவுஞ்சியிரங்கேசா—அன்பரே

செல்லாமையுண்டேலெனக்குரைமற்றுநின்

வல்வரவுவாழ்வார்க்குரை.

(என்பது) நீயெம்மைப்பிரியாமையுண்டாயின் எனக்கு அதனைச்சொல் அதுநீங்கநீபிரிந்துபோய் நின்விரைந்துவருதலை அப்பொழுதுஉயிர்வாழ்வார்க்குசொல்லுஎன்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக காதிராசாவின்மகள் கௌசிகையென்பவளை இருசிகனென்னும் ஒருரிஷி விவாகஞ்செய்துகொண்டுசிலகாலங்கூடியிருந்து அந்தரிஷிபிரம்மலோகத்துப்போகும்பொருட்டு ஆகாயமார்க்கமாகச் செல்லும்போது கௌசிகைபிரிவாற்றாமல்தானும்மார்க்கமாகத்தொடர்ந்துபோனாள் அதையம்முனிவன்கண்டு அவளைநதியாகச்சபிக்கார் அவள்கோமதியென்னுநதியாயினாள்—(ஆதலால்இருவர்மனமுமொத்தவர்க்குப்பிரிவுபெருமெனக் கண்டுகொள்க.) (கககூ)

## படர்மெலிந் திரங்கல்.

குன்றெடுத்தான்மார்புகுடி கொண்டிருந்தாள்செங்கமலை

என்றும்பிரியாதிரங்கேசா — நன்றிகூர்

இன்பங்கடன்மற்றுக் காமமஃதடுங்கால்

துன்பமதனிற்பெரிது.

(என்பது) காமம்புணர்ச்சியாலின்பஞ்செய்யும்போது அவ்வின்பம்கடல்போற்பெரிதாம் இனியக்காமந்தானேபிரிவினாலே துன்பஞ்செய்யும்போது அத்துன்பம்அக்கடலினும்பெரிதாமென்று நாயனார் குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாகமகாலட்சுமியானவள் ஒருகாலத்திற்பிரிவுண்டாகும் அதனால்வருந்தவேண்டியிருக்குமெனக்கருதி திருமாலினதுமார்பைவிட்டுப் பிரியாமலிருக்கவரம்பெற்றாள்—(ஆதலால் மாதர்கள்பிரிவில்லாமலிருத்தற்கே நோற்கவேண்டுமெனக்கண்டுகொள்க)

## கண்விதுப்பழிதல்.

காதலருச்சுனைக்கண்டேர்வலியடைந்த

தேதலன்றோமேனுளிரங்கேசா — ஓதில்

கதுமெனத்தாநோக்கித்தாமேகலுழும்

இதுநகத்தக்கதுடைத்து.

(என்பது) இக்கண்கள் அன்றுகாதலனைத் தாமேவிரைந்து நோக்கி இன்றுந்தாமேயிருந்து அழுகின்ற இவ்வறியாமையைச் செயல்

நம்மாலே சிரிக்கத்தக்கவியல்பை உடையதென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக அருச்சுனன்தேவலோகம்போய் காலகேயரிவாதகவசரிவைச்சங்கரித்துதேவேந்திரசிம்மாதனத்தேறி தேவாமுதம்புசித்து அங்கிருக்குங்காலத்தில் ஊர்வசிவந்து தனியேயிருக்கும் அருச்சுனனைக்கண்டுமோகிக்க அருச்சுனன்முறையென்றெனத்தள்ள ஊர்வசிகோபித்துநீபேடியாகவெனச்சபித்துப்போகப் பின்பு தேவேந்திரன்முதலியயாவருங்கண்டு ஊர்வசியிடத்திற்போய் அவளைவேண்டியச்சாபத்தை நிவர்த்திசெய்தார்கள்.—(ஆதலால் தேவமாதாகியஊர்வசி ஒருவன் குணங்குறியாமல்இச்சிப்பதுதகாதெனக்கண்டுகொள்க.) (கக அ)

## பசப்புறுபருவரல்.

மன்னுமகலிகல்லாய் மாநிலத்திலேகிடந்தாள்
என்னுமொழிகேட்டாளிரங்கேசா—துன்னப்
பசந்தாளிவளென்பதல்லாலிவளைத்
துறந்தாரவரென்பாரில்

(என்பது) இவன்பொறுத்திராமல் பசலை நிறைமடைந்தாளென்று என்னைப்பழிச்சொல்வதல்லது இம்மாதை அவர்துறந்துபோனாரென்றுசொல்லுவார் இல்லையென்றுநாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக கௌதமர் அகலிகையிடத்துக்குற்றமில்லாதிருக்கவுந்துறந்து அவர்சொற்படி கெடுங்காலம் கல்லாய்க்கிடந்துபின்புசாபநீங்கிக் கௌதமரையடைந்தாள்.—(ஆதலால் தலைவன்பெண்தன்மையையறிந்துகோபிக்கவேண்டுமென்றுகண்டுகொள்க) (ககசு)

## தனிப்படர்மிகுதி.

சக்கரவாகைத் தருமன்விழுங்கவவள்
எக்கியனையுண்டாளிரங்கேசா—மிக்க
ஒருதலையானின்னாதுகாமங்காப்போல
இருதலையானுமினிது

(என்பது)மகளிர் ஆடவரெனப்படுகின்ற இரண்டிடங்களிலும்ஆசையானது ஓரிடத்தில்உண்டாயில்துன்பஞ்செய்வதாம்காவடிப்பாரம்போலஇரண்டிடங்களிலும்ஒத்திருக்குமாயின் அதுஇன்பஞ்செய்வதாமென்றுநாயனார்குறளில்திருவாய் மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக சுவாகாஎன்னுங் கன்னிகைபேரில் எமன்மோகப்பட்டு விவாகஞ்செய்துகொ

ண்டு அவனை எலுமிச்சம்பழமாக்கி விழுங்கித்தன்னுள்வைத்திருந்த ஒரு
காலத்தில் இந்திரன்வனத்தில் வந்தபோது தன்மனைவியாகியவளை லுமிச்சம்ப
ழத்தை கக்கி பெண்ணாக்கி அவளோடுவிளையாடிய இளைப்பினால் அயர்ந்துநித்
திரைசெய்தான் அக்காலத்தில் அக்கினிபகவான் அவ்வனத்தில்வந்ததைக்க
ண்டு அவள் அவன்மீதுமோகித்து அவனைப்புணர்ந்து பின் அவனை எலுமி
ச்சம்பழமாக்கித்தான்விழுங்கினாள் அதன்பின் எமன்விழித்துச்சுவாகென்ப
ளைப்பழமாக்கித் தான்விழுங்கிவிட்டுத்தன்னிடத்திற்குப்போய்விட்டான்
பின்புதேவர்களும்முனிவர்களும் அக்கினியைத்தேடிக்காணமையால்விஷ்
ணுவினிடத்திற்குவந்துசொன்னார்கள் விஷ்ணுலோககர்த்தாவாகையால் அ
க்கினியிருக்குமிடமறிந்து எமனையழைத்து அவன்வயிற்றிலிருந்த பெண்
ணைக்கக்கச்சொல்லிப்பின் அப்பெண்ணின்வயிற்றிலிருந்த அக்கினியைக்க
க்கச்சொல்லி அக்கினியைவெளிப்படுத்தினார்.—(ஆதலால்பின்னர்எமனைக
ண்டு ஒருதலைக்காமமென்று அவளைத்துறந்தனனெனக்கண்டுகொள்க.)

## நினைந்தவர்புலம்பல்.

சுந்தோபசுந்தரிகல் சூழ்ந்துபொருதிறந்த
தெந்தவகைமேனுளிரங்கேசா — சிந்தையால்
உள்ளினுந்தீராப்பெருமகிழ்செய்தலால்
கள்ளினுங்காமமினிது

(என்பது)கள்ளானது உண்டபேரைமயக்கும் காமமானதுகண்டபே
ரையும்நினைத்தபேரையும் மயக்குதலால் கள்ளினுங்காமந்தீராத பெருமகி
ழ்ச்சியைத்தருமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாரதலால்
அதற்குதாரணமாக திருமால் பாற்கடல்கடைந்தெடுத்தவமுதத்தைத் தே
வர்களுக்குப்பகிரவேண்டி அரக்கருக்காகத்தான்மோகினியுருவமாகவந்
நின்றபோது சுந்தனென்பவனும்உபசுந்தனென்பவனும் தமயன்தம்பியா
யிருந்தும் மோகினியைக்கண்டு இருவரும்அவளுடையஇரண்டுகையையு
ம்பற்றிக்கொண்டார்கள் அதனைமோகினி கண்டுஒருபெண்ணுக்குஇரண்டு
புருஷர்இருத்தல் தருமமல்லஉங்களிருவரில்யார்சமர்த்தரோ அவரையான்
விவாகஞ்செய்துகொள்ளுவேனென அப்படியேயிருவருந்தங்கள்சமார்த்தி
யத்தை அவளுக்காட்ட இருவரும்பொருதிறந்தார்கள்.—(ஆதலால் கள்ளி
னுங்காமம்பெரிதெனக்கண்டுகொள்க.) (௧௨௧)

## கனவுநிலையுரைத்தல்.

செய்தவஞ்சேர்வாணனது செல்விகனவுநிலையில்
எய்தினளன்றோவிரங்கேசா — பைய

நனவினானல்கா தவரைக்கனவினால்

காண்டலினுண்டென் னுயிர்.

(என்பது)நினைவிலே யின்பத்தைதராத நாயகனைகனவிற் காணுந் தோறு மகிழ்ச்சியையடைதலால் என்பிராணனிற்குமென்றுநாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாகவாணசூரன்மகள்உஷைஎன்பவள்அநிருத்தினைச்சொற்பனத்திற்கண்டு அவன்மேல்மோகத்தினால் விரகப்பட்டுத்துன்பப்படுங்காலையில்தெய்வீகமாகஅர்த்தராத்திரியில் ஒருபூதகணமானது அநிருத்திரனைநித்திரையிலெடுத்துவந்துஉஷையிடத்தில்விட கனவிலேகண்டதுபோலநினைவிலுங்கண்டு அனுபவித்தாள் (ஆதலால் கனவிலேதலைவனைக்கண்டபோது நினைவிலுஞ்சேரக் கிடைப்பனெனக்கண்டுகொள்க.) (கஉஉ)

## பொழுதுகண்டிரங்கல்

காக்கும்பதியகலக் காட்டிற்சலர்க்காரி

ஏக்கமுற்றாளன்றேரங்கேசா—நோக்கில்

பனியரும்பிப்பைதல்கொண்மாலை துனியரும்பித்

துன்பம்வளர வரும்.

(என்பது)தலைவனைவிட்டுப்பிரிந்தவர்க்கு மாலைப்பொழுதானது குளிர்ச்சியைத்தந்து விரகமுண்டாக்கி பின்புவிசாரமுந்துன்பமும்வளரவருமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குகாரணமாகபிரம்மச்சாரியாகவிருந்த சலர்க்காரமாமுனிவனைப் பிதுர்க்கள் விவாகஞ்செய்துகொண்டு கிரகஸ்தவாசிரமத்தைப் பெற்றிருக்கச்சொல்லி வேண்டிக்கொண்டார்கள் அதற்கவர்தன் பெயரைக்கொண்ட பெண்ணிருக்குமானால் விவாகம்பண்ணிக்கொள்ளுகிறேனென்றார் அப்படியேநாகங்களின்சகோதரியாகிய சலர்க்காரியைவிவாகஞ்செய்துகொடுத்தார்கள் அவ்வாறேகிரகஸ்தாசிரமத்திலிருந்து தவஞ்செய்துவருகையிலொருநாள் சலர்க்காரனை மடியில்தலைவைத்து நித்திரைசெய்யும்போதுசாயுங்காலமானதால்சந்தியாவந்தனைசெய்யுங்காலந் தப்பிப்போகுமென்று முனிவனையெழுப்பினள் முனிவன் நீ யிப்படியெழுப்பலாமாவென்று கோபித்துஅவளைவிட்டுப்பிரிந்தார்.—(ஆதலால்சமீபத்திலேயிருந்த தலைவரைப்பிரிந்து இவ்விரக வேதனையைமாலைப்பொழுது உண்டுபண்ணினமையால் மிகவுங்கொடிதெனக்கண்டுகொள்க.) (கஉ௩

## உருப்புநலனழிதல்.

மங்கையுமையோர்பங்கு வாங்கியங்கிணைப்பால்
இங்கிதமுமற்றுளிரங்கேசா — செங்கை
முயக்கிடைத்தண்வளிபோழப்பயப்புற்ற
பேதைபெருமழைக்கண்.

(என்பது) நாயகன் ஆலிங்கனம்பண்ணினவ்வளைகநெகிழ்ந்து இருவர்மத்தியில் காற்றுநுழைதலும்சரீரம்பசலைபூத்துநாயகியின் கண்ணினின்றுவெள்ளம் ஆறாகப்பெருகினவென்று நாயகனுக்குமளில்திருவாய்மலர்ந்தருளினானாதலால் அதற்குக்காரணமாகப் பார்வதி பிரிவுவருமென்றுகருதிப் பரமசிவனைநோக்கித்தபசுசெய்து அர்த்தநாரீஸ்வரம்பெற்றாளெக்காலத்தும்பிரிவின்றி யிருக்கின்றாள்.—(ஆதலால் உத்தமனாதுடையவர் பிரிவுபெறாரெனக் கண்டுகொள்க. (௧௨௪)

## நெஞ்சொடுகிளத்தல்.

முன்னைபிரதிக்கு மொழிந்தபதிகந்த
தின்னலமன்றோவிரங்கேசா — துன்ன
நினைத்தொன்றுசொல்வாயோநெஞ்சேயெனைத்தொன்றும்
எவ்வநோய்தீர்க்கு மருந்து

(என்பது.) பிரிவினாற்கடினமாகிய விரகநோயை தீர்க்குமருந்தொன்றுநெஞ்சமே ஆலோசித்துச் சொல்லமாட்டாயோவென்றுநாயகனுக்குமளில்திருவாய்மலர்ந்தருளினானாதலால்அதற்குக்காரணமாக பரமசிவன்வடவாலவிருக்ஷத்தின்கீழ் தட்சணாமூர்த்தமாக எழுந்தருளியபோது மன்மதன் தன்னுடையபாணங்களினால்மேலசிவனையெய்து அவராதுதபசையழிக்க அப்பொழுது ஆண்டவன் நெற்றிக்கண்ணைத்திறந்துபார்க்க மன்மதன்எரிந்து சாம்பலானான் இரதிதேவியதைக்கண்டுதலைவிரித்தழுதுக்குறித்துத்துன்பமுற்றுப் பரமசிவனைவணங்கிமாங்கலியபிட்சைகேட்டு எழுப்பிக்கொண்டுபோனாள்.—(ஆதலால்தலைவனைப்பிரிந்தவளுக்குத் தலைவனைச்சேருமுபாயமொன்றுசொல்லவேணுமெனக்கேட்டாளெனக்கண்டுகொள்க) (௧௨௫)

## நிறையழிதல்.

பின்னைக்கினியமொழி பேசிவென்றமாயவர்போல்
என்னைத்தொண்டாளுடபிரங்கேசா — முன்னின்ற

பன்மாயக்கள்வன் பணிமொழியன்றோநம்
பெண்மையுடைக்கும்படை.

(என்பது) பலவஞ்சனைகளையுடைய கள்வனாகிய தலைவன்சொல்லும் இன்சொல்லன்றோநமது புத்தியையுடைக்கும் ஆயுதமென்றுதலைவிபாங்கியுடன்கூறினதாகநாயனார் குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக ஸ்ரீகிருஷ்ணதேவர் ஏழுவிடைகளைத் தழுவி சத்தியபாமையை மணஞ்செய்தபின்புஅவளுடன் இன்சொல்லாகப்பேசி அவள்புத்தியைக்கலைத்துப்பின்னும்பல விவாகங்களைச்செய்துகொண்டு அப்பலரோடுங்கூடிவாழ்ந்தார்—(ஆகலால் இன்சொல்லாற்றலைவன் ஸ்திரீகளைவசீகரிப்பனெனக்கண்டுகொள்க) (௧௨௬)

அவாவயின்தும்பல்.

வஞ்சியுருக்குமணி மாமால்வரும்வழிபார்த்
தெஞ்சுமுளமபோலுமிரங்கேசா—பஞ்சணையில்
கூடியகாமம்பிரிந்தார்வரவுள்ளிக்
கோடுகோடேறுமென் னெஞ்சு

(என்பது) கூடிக்கலந்துபிரிந்ததலைவன் வரவைக்கருதியவர்சென்றவூரினும் வருதற்குரியபலவழிகடோறும் என்னெஞ்சு நாடிச்செல்லுமென்று நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால்அதற்குதாரணமாக ஸ்ரீமகாலட்சுமிதிருவவதாரமாகிய உருக்குமணியம்மன் தன்பிதாகலியாணங்குறித்தகாலத்து கிருஷ்ணதேவரிடத்துத் தூதனுப்பிஅவர்வரனோக்கிப்பட்டணத்தின் புறத்தில்தவசுசெய்யுங்காலத்தில் கிருஷ்ணதேவர்வந்துதிருமணஞ்செய்தார்—(ஆதலால் கற்புடையமாதர்கள் இதயம்தலைவன்சென்றதடங்களை நாடிச்சொல்லுமெனக்கண்டுகொள்க.) (௧௨௭)

இரண்டாவது - பெண்பாற்கிளவி

முற்றும்.



## மூன்றாவது அன்பியல்.



### குறிப்பறிவுறுத்தல்.

செட்டிவள்ளியம்மைச் சிறுமுறுவல்கண்டுளத்தின்
இட்டமறிந்தானிரங்கேசா—மட்டார்
முகைமொக்குளுள்ளது நாற்றம்போற்பேதை
நகைமொக்குளுள்ளதொன் றுண்டு.

(என்பது) அரும்பினிடத்துமணமடங்கியிருந்தாற்போல்தலைவிபுன்முறுவலிடத்து அன்படங்கியிருக்குமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குதாரணமாக கந்தசுவாமிதினைபுனத்தின்கண்வள்ளிநாச்சியாரைக்கண்டு வசனிக்கும்போது அந்தநாச்சியாரதுஉள்ளத்தைமுறுவற்குறிப்பாலறிந்துகலந்தார்—(ஆதலால் மாதர்களுக்கு உள்ள நாணம் மடம்அச்சம்பயிர்ப்பு என்னுநான்குகுணங்களையுந்தள்ளி முறுவலரிம்புமெனக்கண்டுகொள்க) (கஉஅ)

### புணர்ச்சிவிதும்பல்.

காந்தன்றனிற்பிரிந்துகாலத்தகன்றதமை
யேந்திமறந்தானிரங்கேசா—காந்தி
எழுதுங்கால்கோல்காணாக் கண்ணேபோற்கொண்கன்
பழிகாணேன் கண்டவிடத்து.

(என்பது) மடலெழுதுங்காலத்து ஓரவயவத்தை யெழுதியனதப் பார்க்கும்போது பாவையினிடத்திறைப்புடியவேறுயவயவமெழுதுதூரியக்கோலைக் காணாதகண்போலப்பிரிந்ததலைவனிடத்துள்ளகுறையாவதுஅவனைவெதிரிற்கண்டவிடத்துமறந்துவிடுமென்று நாயனார்குறளிலே திருவாய்மலர்ந்தருளினார் ஆதலால்நளமகாராசன் தமயந்தியைஅர்த்தராத்திரியில்வனக்காட்டிலேவிட்டுப்பிரிந்துபோன குற்றத்தைஅவன்வந்துசேர்ந்தஎதிர்க்கண்டபோதுமறந்து களித்துக்கூடினாள்—(ஆதலால் மாதர்கள்தலைவனிடத்து எவ்வளவுகுற்றமிருந்தாலும் கண்டவிடத்துஅவ்வளவுமறந்து களிப்பாளெனக்கண்டுகொள்க) (கஉகூ)

### நெஞ்சொடுபுலத்தல்.

காங்கையர்மீதாசை கரவாமலம்மையுளம்
ஏங்கியெரிவீழ்ந்தாளிரங்கேசா—ஆங்கே
தனியேயிருந்து நினைத்தக்கால் என்னைத்
தினியவிருந்ததென் னெஞ்சு

(என்பது) என்னெஞ்சம் இந்தவிடத்திலிருந்தது காதலரைப்பிரிந்திருந்து அவர்கொடுமைகளை யான்றன்னோடு நினைத்தவிடத்து அவ்வளவிலிருந்து என்னைத்தின்பதுபோன்று துன்பஞ்செய்தற்கேயென நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் காங்கேயனைவிஷ்ணுமொன்றுநினையாமல் அம்பையென்பவள் அவர்பேரிலாசைகொண்டு தன்னைமணஞ்செய்துகொள்ளச்சொல்ல அவருடன்படாமையால் பரசிராமரைக்கண்டுசொல்லிவித்துக்கேளாமையால் அவ்வாசையைத்தாங்கமாட்டாமல் அக்கினிப் பிரவேசமானாள்—(ஆதலால் அன்பினால் மாதர்கள் மனமுருகி சீவனைவிடுவாரெனக் கண்டுகொள்க.) (௧௱௰)

## புலவி.

அன்பர்திருநீலகண்டரணியிழைபால்
இன்பந்துறந்தாரிரங்கேசா—முன்பாக
ஊடியவரையுணராமைவாடிய
வள்ளிமுதலரிந்தற்று,

(என்பது) தும்மோடூடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல் முன்னமேநீர்பெறாது வாடிய கொடியை அடியிலே யறுத்தாற்போலுமென்று நாயனார்குறளில் திருவாய்மலர்ந்தருளினார்ஆதலால்அதற்குதாரணமாக திருநீலகண்டரிடத்து அவர்மனைவிசந்தேகித்துப பிணங்கினதுகண்டு தன்மேற்குற்றமில்லாமற் பிணங்ககாரணமென்னென்று அவரும்பிணங்கி நெடுங்காலந்தனக்குந் தனமனைவிக்குஞ்சம்பந்தமில்லாமல் தங்கள்காலத்தைக்கழித்தபின்பு பரமசிவன்வந்து அவர்களூடலையும வார்த்திகத்தையுநீக்கி இளமையும்வாழ்வுந் தந்துகந்தார்—(ஆகலால் இருவரிலொருவருடில் ஒருவரிஞ்சொல்லினால் அவ்வூடலைத்தீர்த்துக்கொள்ளவேண்டுமெனக்கண்டுகொள்க. (௧௱௰௧)

## புலவிநுணுக்கம்.

சேர்ந்துமணஞ்செய்ய மறுசென்மமும்பக்கலுரும்
ஏந்திழையைப்போலுமிரங்கேசா—வாய்ந்தும்மை
இம்மைப்பிறப்பிற்பிரியலமென்றேனுக்
கண்ணிறைநீர்கொண்டனள்.

(என்பது) தலைவன்றலைவியைப்பார்த்து இந்தசென்மத்திலேயுன்னைப்பிரியேனென்ன தலைவி ஆசைமிகுதியால் மறுசென்மத்திற் பிரிவாரென்றுகருதி கண்ணிரினின்றும்நிறைந்தநீரைப் பெருக்கினளாகி வாடினளென்

அ நாயனார்குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக
நளாயினியென்னுங்கற்புடையமாது ஒருரிஷியைவிவாகஞ்செய்து கொண்டு
நெடுங்காலஞ்சுகத்தோடு வாழ்ந்திருந்தசரீரத்தைவிட்டு மறுசென்னமெடு
த்துத் தன்றலைவனாகிய முனிவரிடத்திற்சென்று அவனைமணஞ்செய்துகொ
ள்ளும்படிசொல்லஅவர்வேண்டாமென்றுமறுக்கநளாயினி பரமசிவனைநோ
க்கி அருந்தவஞ்செய்யும்போது பரமசிவன் பிரத்தியட்சமாகி யாதுவேண்
டுமென்றுவினவ அதற்குப்பதிந்தேகியென்று ஐந்துதரங்கேட்டு வரம்பெ
ற்றுக்கொண்டு பின்புதுரௌபதியாகப்பிறந்தாள் —(ஆதலால்தலைவனிடத்
து ஆசைமிகுதியான தலைவிசென்னங்கடோறும் அத்தலைவனையேசேர்ந்து (௧௫௨)
வாழ்வளெனக்கண்டுகொள்க)

ஊடலுவகை.

சத்தியபாமாவூடல்தான்றணிப்பக்கற்பகத்தை
இத்தலத்திற்றந்தானிரங்கேசா — சித்தசற்கும்
ஊடுதல்காமத்திற்கின்பமதற்கின்பம்
கூடிமுயங்கப்பெறின்.

(என்பது) தலைவனுந்தலைவியுமாகிய இருவரும்ஒருவருக்கொருவ
ர்தம்மில்ஊடுவதே காமத்திற்கின்பமாகும் அவ்வூடல்தீர்ந்தபின்னுமிருவ
ருங்கூடித்தழுவிப்பெறுவாராயின் அவ்வூடலுக்கின்பமாகுமென நாயனார்
குறளில்திருவாய்மலர்ந்தருளினாராதலால் அதற்குகாரணமாக ஸ்ரீகிருஷ்ண
தேவருக்கு நாரதமகாமுனிவன் தேவலோகத்துப்பாரிஜாதமலரொன்றுகொ
ண்டுவந்து கொடுத்தார் அதையவர் உருக்குமணியம்மனுக்குக் கொடுக்கக்க
ண்டநாரதர் சத்தியபாமையம்மனுடன்தான் பாரிசாதபுஷ்பங் கொண்டுவந்
து கிருஷ்ணனிடத்திற்கொடுத்ததும் அவர் அதைஉருக்குமணியம்மனுக்கு
க்கொடுத்ததும் விபரமாகச்சொன்னார் அதைக்கேட்ட சத்தியபாமைகிருஷ்
ணதேவரோடு பேசாமல்ஊடலாயிருந்தாள் அதற்காகசுவாமிதேவலோகம்
போய் அவ்விடத்திலிருந்தபாரிசாதவிருட்சத்தைக்கொண்டுவந்து சத்தியபா
மைசிங்காரவனத்தில்வைத்துவிருத்திசெய்துஊடல்தீர்ந்துசந்தோஷத்தை
யடைந்தார் —(ஆதலால் ஒருகாரிய நிமித்தமாக மாதர்களூடினால் அவர்க
ளுக்குவிருப்பமான பொருள்கொடுத்து ஊடல்தீர்த்து கூடவேண்டுமென (௧௫௩)
க்கண்டுகொள்க.)

இரங்கேசவெண்பா - மூலமுமுரையும்

முற்றிற்று.

